*Ūl̲iyan̲*

*Malar 17, ital̲ 11*

*September 10, 1937*

Record no. 148

THE OOLIAN

REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 17
இதழ் 11

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2
மலாய் காசு 15





10—9—1937.

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கஎ. சென்னை, ஈசுவர௵ ஆவணிமீ ௨௬உ வெள்ளி (10-9-1937) இதழ் கக

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடிலாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
நந்தலிலா ஊழியமே நான்கொண்
நல்லனவெந் நாளும் வாழ்க! [டேன்

## மீண்டும் உறுமுகிறார்

பாசிசத்தின் வெறியும் ஹிட்லரின் மூர்க்கமும் எவ்வாறு வளர்ந்துகொண்டு செல்கின்றன என்பதைப் பன்முறை நேயர்கட்கு எடுத்துக் காண்பித்திருக்கிறோம். அதனை நிரூபிக்க இந்நாள் அதிகப்படியான சான்று ஒன்று கிடைக்கின்றது. கடந்த செவ்வாய்க்கிழமையன்று ஜெர்மனியில் நாஜியர் தம் மகாநாடொன்றை நடத்தினர். அதற்கு சர்வாதிகாரி ஹிட்லர் ஒரு செய்தி விடுத்திருந்தார். அச்செய்தியில் அவர் குறிப்பிட்டிருக்கும் காரியங்கள் உலகத்தின் கவனத்தை வலிந்து இழுப்பதாகும்.

ஜெர்மனி இத்தாலியோடு நேசப் பான்மையைப் பலப்படுத்துமாம். சீனாவுக்கெதிராக ஜப்பானுடன் செய்திருக்கும் உடன்படிக்கையை உறுதிப்படுத்தி அதனைக் காப்பாற்றுமாம். இந்த உறுதிமொழிகளால் ஸ்ரீ. ஹிட்லர் புதிய நிகழ்ச்சியெதுவும் குறிப்பிடப் படவில்லையாயினும் அவரது யுத்த வெறியும் ஏகாதிபத்ய மோகமும் எவ்வளவு கொழுந்து விட்டெரிகின்றனவென்பது புலப்படும். ஏற்கெனவே ஜப்பான், இத்தாலி ஆகிய இரண்டும் மேற்கிலும் கிழக்கிலும் செய்துவரும் கொடும் வஞ்சகப் படுமோசச் செயல்களால் உலகத்தின் வெறுப்பைப் பெற்றுள்ளன. இன்னும் சற்று வெளிப்படையாகச் சொன்னால் இன்றைய உலகப் பிரச்னையே அவ்விரு நாடுகளையும் அடக்குவதுதான். அந்த நிலைமையில் ஹிட்லர் அவற்றிற்குப் பக்கபலமளிக்கின்றாரென்றால் அவர் திமிரை வரம்புமீறிய ரத்தவெறியை என்னவென்று சொல்வது!

காலனிகள் விஷயமாகப் பேசும்போது ஹிட்லர் முந்திய வருடங்களில் சொன்னவற்றையே அழுத்திச் சொல்கிறார். "ஜெர்மனியில் மனிதர் வசிக்கப் போதுமான இடமில்லை; ஆதலால் உணவுப் பஞ்சம் வெருட்டுகிறது. கைத்தொழிலில் உண்மையாக வளர்ச்சி பெற்றிருப்பவர் ஜெர்மானியரே; அத்தகையாருக்குத் தேவையான மூலப்பொருட்கள் கிடைப்பதற்கில்லை. ஆனால் பிறரிடமோ ஏராளமாக விருக்கின்றன. ஜெர்மனி காலனிகளை வேண்டுகின்றதென்றால் அது பொருளாதார சம்பந்தமான வேண்டுதலேயன்றி மற்றன்று" என்பவை ஹிட்லரின் வாக்கு. இதிலிருந்து உலகில் பெரும் பகுதியைக் கட்டியாள்பவரும், ஏராளமான காலனிகளை உடைத்திருப்பவரும், ஒரு காலத்தில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த காலனிகளையே கையாண்டு வருபவர்களுமாகிய ஒரு ஜாதியார் மீது பாணந்தொடுக்கிறார் என்பது யாருக்குத்தான் புலனாகாது? ஹிட்லரின் ஆசை சிலருக்கு மேற்பார்வையில் நியாயம் போல் தோற்றலாம்; ஆயினும் ஏகாதிபத்ய வெறியில் அவ் ஆசை முளைத்தெழுகின்றதென்பதை மறைத்துவிட முடியாது.

கீழ்நாட்டில் நடைபெறும் ஜப்பான் அட்டூழியத்தைக் குறிப்பிடுகையில், ஹிட்லர், "தொல்லை தரும் ஒரு பைத்தியத்தை" ஒழிப்பதற்காகவே ஜப்பான் பாடுபடு

கின்றதென்றும், அவ்வித முயற்சியே ஸ்பெயினில் நடைபெறுகிறதென்றும் செப்புகின்றார். சும்மா, தம் போக்கில், தந்நாட்டுக்குள்,—தப்போ சரியோ—எதனையோ செய்துகொண்டிருந்த ஸ்பெயினிலும் சீனாவிலும் பாசிஸ்டுகள் தலையிட்டுக் கொலையும் கொள்ளையும் புரிந்துவிட்டு அந்த நாடுகளில் பரவும் பயித்தியத்தை ஒழிக்கப் பாடுபடுவதாகக் கூறுவார்களென்றால் அக்கூற்று திமிரா அல்லது பைத்தியமா அல்லது இரண்டுமா என்று தெரியவில்லை.

ஜப்பானைத் தட்டி கொடுக்கின்ற போது ஸ்ரீ ஹிட்லர், "எதிரிகள் ஜப்பானின் நாகரிகத்தைக் கெடுக்கப் பார்க்கிறார்கள்" என்கின்றார். எந்தச் சீனர்கள் ஜப்பானின் நாகரிகத்தைக் கெடுத்தார்கள்? சீனாவில் தலையிட்டு நாடுதேடும் அந்நியனின் வேட்டைப் புத்தியைத் தடை செய்வதுதான் நாகரிகத்தைக் கெடுக்க முயல்வதென்றால் சீனர்கள் செய்தது தப்பிதமேயாகும்.

* * *

ஹிட்லரின் மேற்படிப் பிரசங்கம் எவ்வாறு, ஜப்பான் ஜெர்மனி இதாலி ஆகிய மூன்று நாடுகளும் சேர்ந்து ஏழை நாடுகளைக் கொன்றழிக்கக் கங்கணம் கட்டி யிருக்கின்றன என்பதற்கு கரதலா மலகம் போன்ற சான்றாகும். ஜப்பான் கீழ்நாட்டில் கடுகத்தனை யெனினும் நசுக்கப்பட்டால் உடன் முசோலினியின் நீர்மூழ்கிகளும் ஹிட்லரின் வெடிக்குண்டு விமானங்களும் பெப்பிக்கை நாடத் தொடங்கிவிடும் என்பதற்கு ஐயமில்லை.

* * *

ஹிட்லரின் பேச்செல்லாம் ஆங்கிலேயரின் அபாய நிலையையன்றி வேறெதைக் காண்பிக்கிறது!

## ஜனப்பிரதிநிதி சபைக்குள் ராட்டினத் திகில்

### ராஜாஜியின் பதில்

கேள்வி:—ராட்டினத்துக்கு 2 லட்சமா? ஒருவரைக் கொள்ளையடித்தா இன்னொருவருக்குக் கொடுப்பது?

—ஒரு எம். எல். ஏ.

பதில்:—அரசியல் முறையே ஒருவரைக் கொள்ளையடித்து இன்னொருவருக்குக் கொடுப்பதுதான்.

—ராஜாஜி.

* * *

கேள்வி:—கதர் பிரசாரத்திற்கு கவர்ன்மெண்டுப் பணம் உபயோகப்படுத்துவது ஞாயமா?

பதில்:—என் மூக்கில் மூச்சு உள்ள வரையிலும் காந்திஜியின் தொண்டையில் சக்தியிருக்கும் வரையிலும் சல்லி கூட கதர் பிரசாரத்திற்கு வேண்டியதில்லை.

* * *

கைராட்டை ஆலைத் தொழிலை அழித்துவிடுமே!

—எம். எல். ஏ.

இந்தப் போராட்டத்தில் ஆலைத் தொழில்கள் அழிந்து விடுமாகில் அதற்காக ஒருவரும் வருந்தமாட்டார்கள்...............நான் இந்த கவர்மெண்டின் ஒரு அம்சமாக விருக்கும் வரையிலும் ஒவ்வொரு ரூபாயையும் ராட்டைகளைச் சுழற்றிப் பிழைக்கும் ஏழைப் பெண்களுக்குத் தான் எடுத்துக் கொடுப்பேன்.

—ராஜாஜி.

* * *

கேள்வி:—சர்க்கார் பணத்திலிருந்து மந்திரிகளுக்கு மோட்டார்களா?

—எம். எல். ஏ.

பதில்:—இதில் எவ்விதத் தவறுமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. கார்கள் எங்களுக்குப் பின்னரும் சர்க்கார் உடைமையாகவே யிருக்கும். பொது ஜனங்களின் சம்மதத்துடன் எங்கள் பின் வருபவர்களும் அவற்றை உபயோகித்தும் கொள்ளலாம் (சிரிப்பு).

## மா. கா. கமிட்டிக்கு ஜவஹர் சுற்றறிக்கை

காங்கிரஸ் மகாசபைத் தலைவர் மா. கா. கமிட்டிகளுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பியிருக்கிறார். அதில் அவர் இந்தியரைப் பாதிக்கும் உலகப் பிரச்சினைகளில் நாம் கவலையீனமாயிருந்து விடலாகாதெனவும், தற்போது இந்திய மக்களின் அபிப்பிராயங்களுக்கு மதிப்புக் கிடைத்து வருகிறதெனவும் சொல்கிறார். தற்போதைய சில முக்கியப் பிரச்சினைகளைப் பற்றி அவர் கீழ் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

1. ஜான்ஸிபார் இந்தியரை ஆதரித்து கா. கா. கமிட்டி கிராம்பை பகிஷ்கரிக்கும்படிக் கேட்டுக்கொண்டிருக்கிறது. இதற்கு அனைவரும் துணைபுரிய வேண்டும்.

2. பாலஸ்தீன் சுயேச்சைப் போராட்டத்திற்கு காங்கிரஸ் ஆதரவளிக்கிறது. ஏகாதிபத்ய வாதிகளின் ஆதிக்கத்தை வளர்த்துவரும் முறைகளை எதிர்க்க வேண்டும்.

3. அபிஸீனியக் கோரச் செய்கையை ஒருவரும் மறக்கமுடியாது. இதற்கு பிரிட்டிஷ் சர்க்காரும் ஒரு விதத்தில் பொறுப்பாளிகள். சர்வ தேச சங்கத்திலிருந்து அபிஸீனியாவை நீக்க பிரிட்டிஷ் சர்க்கார் முயல்கிறது. இந்தியப் பிரதிநிதிகள் அபிஸீனியாவை அடக்கும் முறைகளை ஆக்ஷேபிக்க வேண்டும்.

4. பிரிட்டிஷ் ஏகாதிபத்யக் கொள்கைக்காக இந்திய யுவர்களும் இந்திய உரிமைகளும் உபயோகிக்கப்படும். ஆதலால் ஷாங்காய்க்கு இந்தியப் படை அனுப்பப்பட்டிருப்பதைக் கண்டிக்கவேண்டும்.

5. தற்போது கீழ்த்திசையில் நடைபெறும் யுத்தத்தில் சீனாவுக்கு அனுதாபம் காட்டவேண்டும். ஜப்பானிய வலுச் சண்டையை எதிர்க்க வேண்டும். உலக யுத்தம் ஏற்படுமாகில் நாம் அதில் தலையிட்டுக் கொள்ள மாட்டோம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள வேண்டும்.



# அரசியல் உலகம்

"கோபி"

### முறை தவறு

காங்கிரஸ் மெஜாரிடிபெற்ற மாகாணங்களிலெல்லாம் அரசியல் நிர்ணய சபைத் தீர்மானம் சிறுசிறு எதிர்ப்புகளுடன் நிறைவேறிவிட்டது. ஆனால் பீஹார்மட்டிலும் அம்முறையிலிருந்து சிறிது தவறியிருப்பதாகக் கேள்விப்படுகிறோம். அங்கு மூஸ்லிம் சுயேச்சைக் கட்சியாருக்கும் காங்கிரசுக்கும் நடைபெற்ற ராஜிப் பேச்சுகளால் தீர்மானத்தில் ஒரு திருத்தம் ஏற்பட வேண்டியதாகிவிட்டது. அத்திருத்தம் மூஸ்லிம் சுயேச்சைக் கட்சியார் கொணர்ந்ததாகும். அதனால் (அத்திருத்தத்தால்) காங்கிரஸ் கட்சி, அரசியல் நிர்ணய சபையில் மைனாரிடிகட்கு தகுந்த பிரதிநிதித்துவம் கொடுக்க இசைந்தது. இந்தத் திருத்த உடன்பாடு தப்பானதா சரியானதா என்பதை இப்போது சொல்லிவிடுவதற்கில்லை. பீகாரின் நிலைமையும் அங்குள்ள மூஸ்லிம்களின் உணர்ச்சியும் தெரிந்த பின்னரே எவரேனும் அபிப்பிராயம் சொல்ல முடியும்.

### ஜோசியமன்று

அரசியல் நிர்ணய சபை கூடினால் அது என்ன மாதிரி முடிவை வெளியிடும் என்று திட்டமாக இப்போது கூற முடியாது. திரு. ராஜகோபாலாச்சாரியார் சொன்னவாறு காங்கிரசுக்கு அநுகூலமான முடிவு வந்தாலும் வரலாம், பிரதிகூலமாக (இதர கட்சிகட்குச் சாதகமான) முடிவு ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஆயினும் மேற்படி அ.நி.ச. தீர்மானம் கொண்டு வரப்படும் சட்டசபைகளிலெல்லாம் எதிர்க்கட்சிக்காரர்கள் கூக்குரல் போடுகிறார்கள். அவர்கட்கும் புதிய அரசியல் ஒழிந்து மற்றொரு அரசியல் ஏற்பட வேண்டுமென்பது தான் ஆசை. ஆயினும் பயப்படுகிறார்கள் என்றால் பொருளென்ன?—காங்கிரஸ் ஜோதியிலிருந்து எந்த அரசியலும் தப்பிப் போகமுடியாது என்பதே எதிரிகளுடைய எண்ணமாகும். இந்த ஒன்றினாலேயே தேசத்தின் பரந்த உணர்ச்சி எக்கட்சி பற்றியது எனத் தெரிகிறதல்லவா?

• • •

### பெயரிலென்ன வந்தது?

ஞாயிற்றுக்கிழமையன்று சென்னை மாகாண அரசியல் மகாநாடு கூடி அரசியல் நிர்ணய சபை சம்பந்தமான ஒரு தீர்மானத்தைப்பற்றி வாதித்தபோது, சோஷலிஸ்டு கட்சியார், 'இப்போது கூட்ட நினைக்கும் அரசியல் நிர்ணய சபை சரியான 'கான்ஸ்டிடுவெண்ட் அசம்ப்ளி'யல்ல; தேசம் விதேசியர் கையிலிருந்து பரிபூரணமாக விடுதலை பெற்ற பிறகு கூடும் அசம்ப்ளியே உண்மையான கான்ஸ்டிடுவெண்ட் அசம்ப்ளியாகும்" என்று வாதாடினார்கள். இந்த வாதாட்டம் எதற்கு? தேசம் பரிபூரணமாக விடுதலை பெற்று ஒரு கான்ஸ்டிடுவெண்ட் அசம்பளியைக் கூட்டுவதற்காகவே தான் இந்த கான்ஸ்டிடுவெண்ட் அசம்பளி இப்போது கேட்கப்படுகிறது. கூடப் போகும் கூட்டத்திற்கு என்ன பெயரிருந்தாலும் நமக்கு வேண்டுவது காரியந்தானே!

• • •

### ஜப்பானும் கையை விரித்தது!

ஜப்பான் விமானமொன்று ஷாங்காய் பிரிட்டிஷ் ஸ்தானீகரான ஹூகெசன் என்பவர் மீது வெடிக்குண்டெறிந்து அவர் முதுகெலும்பை முறித்துவிட்டதென்ற செய்தியை நேயர்கள் அறிவார்களல்லவா? அச்செய்திக்கு இப்போது வினைவந்திருக்கிறது. பிரிட்டிஷ் சர்க்கார் தம் ஸ்தானீகரைச் சித்திரவதை செய்தது சம்பந்தமாக ஜப்பானிடம் 'எக்ஸ்ப்ளனேஷன்' (மூகாந்திரம்) கேட்டனர். ஜப்பான் நீளமாக யோசித்துவிட்டு, தமக்கு ஒன்றும் தெரியாதென்றும், மேற்படி சம்பவத்திற்கு தாம் கடுகத்தனையும் பொறுப்பாளி யல்லவென்றும் கூறிவிட்டது.

### எனில் யார்?

எனில் அட்டூழியத்தைச் செய்தவர் யார்? சீனர்களல்லவென்பது ஆங்கிலேயர் முதல் ஜப்பானியர் வரையிலுமுள்ள அனைவரும் ஒப்புக்கொள்வர். எனவே குண்டு விழுந்தது எப்படி? மர்மமாக எவரேனும் தோற்றி குண்டெறிந்தார்களா?—ஜப்பான் ஆங்கிலேயரின் நிலைமையைப் பார்த்துக் கொண்டது போலும்; ஆகவே தான் முசோலினியைப்போல தானும் பதில் சொல்ல ஆரம்பித்திருக்கிறது. இருவரும் ஒரே பள்ளிக்கூடத்தைச் சேர்ந்தவர்கள் தானே?

• • •

### ரூஸ்வெல்டுக் கெதிர்ப்பு

அமெரிக்கா முழுதும் இக்கா ளெழுந்திருக்கிறது. பலர், தலைவர் ரூஸ்வெல்டை எதிர்க்கின்றனர். பத்திரிகைகள் ஓலமிடுகின்றன. செனட்டர்கள் விலவிலக்கின்றனர். இதற்குக் காரணமென்ன? ரூஸ்வெல்ட் திடீரென திங்கட்கிழமையன்று விடுத்த ஒரு உத்தரவில் சீனாவிலிருக்கும் எல்லா அமெரிக்கரும் தாய்நாடுசென்றுவிட வேண்டுமென்று வெளியிட்டு விட்டதே. தலைவர் கட்டளையின் கருத்து, கலகப் பிரதேசத்திலிருந்து அமெரிக்கா தன் சக்தியை வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டது என்பது போலும். இது ஒரு வழியில் கோழைத்தனத்தைக் காண்பிக்கிறதல்லவா? ஆகவே பலப்பலர் "அமெரிக்கக் கொடி அழுப்பில்லாது பறக்க" என்று கூச்சலிடுகின்றார்கள். தலைவர் கேட்கின்றாரில்லை போலும். ஷமாய் போன்ற இடங்களிலுள்ள ஸ்தானீகராலயங்களை மூடிவிடும்படியும் உத்தரவளித்து விட்டார். அமெரிக்கர்கள் (சீனாவிலிருந்த) கப்பலேறத் தொடங்கி விட்டார்களென்று செய்தி கிடைக்கிறது. இதனால் ஜப்பானின் சக்தி பிரமாதமாய் வளர்ந்திருக்கிறதென்று நினைப்பதா?

• • •

## சக்ரவர்த்தி தயாளம்

ஜப்பானில் புதிய டயட் (பார்லிமெண்ட்) சபை 4-ந் தேதி கூடியது. சக்ரவர்த்தி திறந்துவைத்தார். அப்போது நிகழ்த்திய பிரசங்கத்தில் ஜப்பானின் 'நல்லெண்ணத்தை' வெளியிட்டார். ஜப்பான் எப்போதும் சீனுவுடன் கட்பாயிருக்கப் பிரியப்படுகிறதாம். ஆனால் சீனர்கட்கு உண்மை தெரிவதில்லையாம். அவ்வாறு புரியாத புத்தியுடைய சீனுமீது தைரியமாக யுத்தம் செய்துவரும் துருப்புக்களைப் பாராட்டினர். கடைசியில் எல்லா ஜப்பானியரும் ஒன்றுசேர்ந்து ஊக்கமாகக் கடனாற்றவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். கடனாற்றுவதென்பது என்ன? சீனாவை நசுக்குவது தானே அவர் விருப்பம்! அதுதானு உண்மை தெரியாதனுக்குக் கொடுக்கும் தண்டனை?

## புதிய யுத்தநிதி

மேற்படி பிரசங்கத்தின்பின் டயட் சபை சுமார் 12 கோடி பவுனை சீன யுத்தத்திற்காக அளித்தது. அஃதுடன் 15 சட்டங்களையும் 'பாஸ் செய்து' தற்போதிய சர்க்கார் விரும்பியவாறு மேற்படி தொகை முழுவதையும் செலவிட்டுக் கொள்ளுமாறு அநுமதியளித்தது. இதனால் ஜப்பானுக்கு இரண்டு வருடம் வரை எத்தகைய கடுமையான யுத்தத்தையும் நடத்தும் சக்தி கிடைக்குமென்று சொல்லப்படுகிறது. எனவே சீனுவோ உலகமோ சில வருடங்கட்கு ஜப்பானை எதிர்க்கக் கங்கணம் கட்ட வேண்டுவதுதான் போலும்.

* * *

## சீனு தளர்ந்துவிட்டதா?

சீனு தளர்ந்து விட்டதா? இல்லை; இல்லை. ஜப்பான் இதுகாறும் கனவு கூட காணுத மாதிரியில் சீனர்கள் எதிர்க்கின்றனர். பலவிடங்களில் இருசாராருக்கும் முஷ்டி யுத்தமே நடைபெறுகிறது. அவற்றிலெல்லாம் பலப்பல ஜப்பானியர் பரலோகம் செலுத்தப்படுகின்றனர். அடிக்கடி ஜப்பானியர் வாய்விட்டு சீனர்களின் வீரத்தைப் புகழவேண்டியதாகிவிடுகிறது. பெய்பிங்குக்கு சமீபத்தில் ஒரு பட்டியோரம் சில தினங்கட்கு முன்பு ஜப்பானியரும் சீனரும் நெருங்கி யுத்தம் செய்தபோது சீனர் காண்பித்த தைரியம் அபாரம்! ஜப்பானியர் ஒரு மைல் தூரம் திரும்பி ஓடவேண்டியதாயிற்று. ஷூசங் மீது ஜப்பான் படையெடுத்தபோது சீனர்கட்கு நான்கு நாளாக உணவே கிடைக்கவில்லை. எனினும் வெறும் புல்லையும் மரப் பட்டைகளையும் அருந்திக் கொண்டு ஜப்பானியரை எதிர்த்து நின்றனர்; ஆனால் வெல்லமுடியவில்லை. ஆகவே என்ன செய்தனர் தெரியுமா? இன்னும் பகைவர் கையில் வீழ்வதைவிட மரணமே சிலாக்யம் எனத் தேர்ந்து ஒருவர் கூட கீழ்ப்பணியாது அனைவரும் போர்செய்து மாண்டனர்! வீரம் வெல்லுக!

* * *

## பஹிஷ்கரியுங்கள்!

இவ்வாறு தேசத்தைக் காக்கும் ஆண்மைமிக்க அருஞ்சீலர்களை அநியாயமாகப் படுகொலை செய்யும் ஜப்பானை நாம் விட்டுவைப்பதா? கொடுமை செய்வோரை தூவெனத் தள்ளுவதும் அநியாயமாய் நோயுறுவோரைக் கண்டு இரங்குவதுமன்றோ நம் கடன்? ஆகவே பம்பாய் சோஷலிஸ்டுகள் ஜப்பான் சாமான்களைப் பஹிஷ்கரிப்பதென்று தீர்மானித்திருக்கிறார்கள். ஜப்பானின் பணம் முழுதும் வர்த்தகத்திலிருந்து கிடைப்பதுதான். அவ் வர்த்தகத்திற்கு வெளிநாடுகளையே எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. ஜப்பானின் சாமானை வெளிநாடுகள் பஹிஷ்கரிக்க ஆரம்பித்தால் ஜப்பான் தளர்ச்சியுற்றுவிடும். இந்த முறையில் பம்பாய் சோஷலிஸ்டுகள் தீர்மானம் குறிப்பிடத்தகுந்ததே. இன்றைய நிலைமையில் ஜப்பானுக்கு நாம் கொடுக்கும் ஒவ்வொரு பைசாவும் சீனு மீது எறியும் பொருட்டு வழங்கப்பட்ட ஒரு தோட்டாவாகும் என்பதை நேயர்கள் உணரவேண்டும்.

* * *

## வ. மே. எ. புறத்திற்கு ஜே!

ஏற்கெனவே நாம் வடமேற்கு எல்லைப்புறத்தில் காங்கிரஸ் மந்திரி சபை வந்து விடுமென்று எதிர்பார்த்தோம். அது வெற்றியாக முடிந்துவிட்டது. மூன்றாந்தேதி சட்டசபை கூடியதும் டாக்டர் கான் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். ஓர் சிறிய பிரசங்கத்தின் பின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட 5 மெஜாரிடி ஓட்டுகளால் நிறைவேறியது. உடனே முதல் மந்திரி சர் அப்துல் காயம் தம் நிலைமையை விளக்கி ஒரு பிரசங்கம் செய்து, காங்கிரஸ் மந்திரிகளை வரவேற்று, தாம் சந்தோஷமாக ராஜிநாமாச் செய்துவிடுவதாய் வாக்களித்தார். அவ்வாறு ஏழாந்தேதியிட்ட சர்க்கார் பிரசுரமொன்று காயம் மந்திரிசபையின் ராஜிநாமாவை கவர்னர் ஏற்றுக் கொண்டதாகத் தெரிவித்தது. இப்போது டாக்டர் கானின் மந்திரி சபை அமைந்துவிட்டதாயறிகிறோம்.

## யார் மந்திரிகள்?

அதில் டாக்டர் கான் முதன் மந்திரி. அவர் எல்லைப்புற காந்தியின் சகோதரர் என்பது நேயர்கட்குத் தெரிந்திருக்கலாம். இரண்டாவதொரு மந்திரி ஸ்ரீ. டஞ்சுராம் காந்தி. அவர் பழைய காங்கிரஸ் அன்பர். மூன்றாவது மந்திரி காஜி அட்டவுல்லா. இவரும் பழைய காங்கிரஸ் வாதியே. நாலாவதாக வந்திருக்கும் மந்திரி கான் பகமத் அபாஸ்கான். இவர் ஜனநாயகக்கட்சியைச் சார்ந்தவர். இவரும் இதர ஜனநாயகக்கட்சி எம். எல். ஏக்களும் சமீபத்தில் காங்கிரசில் சேர்ந்து விட்டார்கள். ஆதல் பற்றியே காங்கிரஸ் மெஜாரிடி ஏற்பட்டது. இந்தப் புதுமந்திரிகட்கும் அவர்களின் தோற்றத்திற்குக் காரணபூதர்களாயிருந்த எல்லைக் காந்தி, அபுல் கலாம் அஜாத், ராஜேந்திர பாபு ஆகியவர்கட்கும் நல்வாழ்த்துக் கூறுவோம்.

* * *

## ஆரம்ப ஆசிரியர்கள்

போனவாரம் குருவாரஜபாளையம் என்ற ஊரில் நடைபெற்ற ஒடுகத்தூர் சர்க்கில் அரசியல் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்த திரு. சி. ஜெ. வர்க்கியை மராட்டிபாளையத்திலுள்ள ஆரம்ப ஆசிரியர்கள் பலர் பேட்டி

(கடைசிப் பக்கம் பார்க்க)






சிறுகதை

# உத்யோக வேட்டை

(எஸ்.வி.)

### I

"இப்போது பார்க்க முடியாது சார். ஏதோ பரபரப்பான வேலையில் ஈடுபட்டிருக்கிறார்." என்று கூறிக்கொண்டே (பியூன்) சேவகன் விசிடிங் கார்டைக் கொடுத்துவிட்டான்.

கார்டைப்பெற்ற பந்துலு திரும்பி இரண்டடி எடுத்து வைத்தார். வைத்ததும் என்ன நினைத்தாரோ! —பியூனிடம், "ஐயா! எப்போது அவரை சௌகரியமாகப் பார்க்க முடியும்" என்றார்.

பியூன் பந்துலுவின் இரக்கமான கேள்வியைக் கண்டு மனம் மாறிவிட்டான் போலும்; சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, "மாலை நாலு மணிக்கு வேலை முடிந்து சும்மாவிருப்பார்; அப்போது வாருங்கள்" என்றான்.

பந்துலு பேசாது நடந்துவிட்டார்.

சரியாக மணி 4 ஆனதும் விசிட்டிங் கார்டுடன் வந்தார் பந்துலு. அப்போதும் மானேஜர் அனந்தராமைப் பார்க்க முடியவில்லை.

இவ்வண்ணமே நாட்கள் ஏழு கழிந்தன. ஏழு நாளும் காலையிலும் மாலையிலும் நண்பகலிலும் இரவிலுங்கூட நடந்துபார்த்தார்; மானேஜரை சந்திக்கவே முடியவில்லை. கடைசியில் மிகவும் வருத்தத்தோடு ஒரு கடிதத்தை எழுதி மானேஜருக்கு அனுப்பினார். அக்கடிதத்தில் அடியில் வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது:—

"வேலை கிடைத்தாலும் இல்லாவிட்டாலும், நேரில் ஒருமுறை பார்க்கவாவது விடலாகாதா? நான் ஏழு நாட்களாக வந்துவந்து திரும்பிப் போகிறேனே. என்னைப்போன்ற ஒருவனுக்கு பேட்டியாவது தராமலிருப்பது நியாயமா?

—ராம பந்துலு."

பியூன் இக்கடிதத்தையும் விசிட்டிங் கார்டையும் மானேஜரிடம் கொடுத்தான். அவர் கடிதத்தைப் படித்தார். அதில் கூரிய ஒன்றிரண்டு வார்த்தைகளிருப்பது தெரிந்தது. அதனால் வேறொருவராயிருந்தால் கோபம் கொண்டுவிடக்கூடும்; அனந்தராமோ அவ்வாறு செய்யவில்லை. பியூனிடம் "அந்த மனிதனை சற்றுநேரம் உட்காரச்சொல்" என்றான்.

ராமபந்துலு மேற்படி பதிலை கேட்டதும் நடுங்கினார். மனம், ஒருகால், "அவர் வேலையே கிடையாது; இன்னும்வந்து தொந்தரவு செய்யாதே என்று சொல்லப்போகிறாரோ!" எனப் பதறியது. எனினும் தம் விதியை நினைத்துப் பொறுத்திருந்தார்.

### II

ராமபந்துலு யார்? எத்தகையவர்? ஏன் விடாப்பிடியாக வேலைக்கு அலைகிறார்?

அவர் விசாகபட்டணம் வாசி. ஆந்திரர்களில் உயர்வான ஒரு ஜாதியைச் சேர்ந்தவர். ஒரு காலத்தில் பெரும் தனவந்தராயிருந்தார். தனவந்தரென்றால் பத்தாயிரம் பதினையாயிரம் சொத்துடையவரல்ல. சுமார் 100 ஆயிரத்தை வியாபாரத்தில் போட்டு தடபுடலாக நடத்திக்கொண்டிருந்தார். அதுகாலை அவர் குடும்பமும் செல்வாக்கும் இருந்த

மாதிரி ஒரு தனித் திணுசு. விசாகபட்டணத்திலேயே ராமபந்துலுவென்றால் 2 வயதுக் குழந்தைகூட அறியும்.

அப்போது அவரிடம் வேலைக்கு வந்தவர்களோ—பலப்பலர். எத்தனையோ பேர்கட்கு வேலை கொடுத்தார். எத்தனையோ பேர் வேலை கொடுக்கப்படாததால் திட்டிக்கொண்டும் போனார்கள். ஒருவன்—ஒரு கிராஜுவெட்—ஒருநாள் வேலையில்லை என்றதற்காக வாயில் வந்தபடி பேசிக்கொண்டு போய்விட்டான். ஏன் திட்டுகிறாய் என்றதற்கு, "வேலை இல்லை என்பதற்கு ஏன் ஏழுநாள் காக்கவைக்கிறாய்?" என்று பதில் கூறினான். பந்துலுவோ—பாவம்! அவனை ஒன்றும் செய்யவில்லை. தம் வேலையில்லாத் திண்டாட்டத்தால் அப்படிப் பேசுகிறான் என்று எண்ணி சும்மா விருந்துவிட்டார். அதனால் அந்த வாலிபனுக்குக் கூட கொஞ்சம் பச்சாத்தாபமாம். ஆனால் அவன் அந்த பச்சாத்தாப உணர்ச்சிக்காக பந்துலுவின் மரியாதைக்கு ஆளானானில்லை. காரணம் அவன் விட்டை விட்டுப் போனதும் 1000 ரூபாய் நோட்டுக்கட்டு ஒன்று காணாமற் போய்விட்டது. அதனை அவன் தான் திருடினானோ அல்லவா என்பது யாருக்கும் தெரியாது; ஆயினும் பலர் அவனையே சந்தேகித்தார்கள்.

* * *

இவ்வாறு பெரும் வியாபாரியாயிருந்த பந்தலு—"வினையுலப்பவேறாகி வீழ்வர்" அன்றோ மானிடர்?—பல காரணங்களால் வறுமையுற்று வியாபாரம் அற்று, குடும்பமும் இற்றுப்போக சுமார் 40 வயதுப் பக்குவத்தில் கதிகெட்டவரானார். பெண்டு பிள்ளைகளை யெல்லாம் சொந்தக்காரர் வீட்டில் விட்டு விட்டு சென்னையை நாடிவந்தார். அவரது ஆசை ஏதாவது வியாபார நிலையத்தில் வேலைபார்த்து தம் பழைய அனுபவத்தால் உயர்ந்த சம்பளம் பெறலாமென்பதாகும். அதற்காகவேதான் அநந்தராமின் வியாபார நிலையத்தை அதிகமாக நாடினார்.

* * *

அநந்தராம் சென்னையில் மிகப் பிராபல்யம் வாய்ந்திருந்த பஞ்சு வியாபாரிகளில் ஒருவர். பிரமாதமான ஆபீஸ் ஒன்றை நடத்தினார். திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம் ஆகிய மூன்று ஜில்லாக்களிலும் ஏஜெண்டுகளிருந்தனர். அவர்கள் பஞ்சைச் சேகரித்து சென்னைக்கு அனுப்ப, அதனை இவர் (அநந்தராம்) இரண்டு மில்கட்கு 'சப்ளை'செய்து வந்தார். இதனால் மாதாமாதம் சில ஆயிரங்கள் லாபம் கிடைத்துவந்தன.

அவருக்குக் கீழ் வேலைபார்த்த கிளார்க்குகள் சுமார் 40 பேர். எனில் நிலையத்தின் பெருமையைச் சொல்லவேண்டுமா?

III

சரியாக மணி 12 அடித்தது. அநந்தராம் சாப்பாட்டுக்குப்போகும் சமயம். அப்போது திடீரென கீழே காத்திருக்கச் சொன்ன ராம பந்துலுவின் ஞாபகம் வந்தது. உடன் 'பெல்லை' அடித்தார். சேவகன் ஓடிவர அவன் மூலம் பந்துலுவை அழைப்பித்தார்.

பந்துலு மானேஜரை நாடியதும் நடுநடுங்கி வாய் பதற, "எங்கு தன்னை வேண்டாமென்று கூறிவிடுவாரோ" என்ற கலக்கத்துடன் ஒருபால் ஒதுங்கி நின்று தன் தாழ்மையான நிலைமையையும், தான் முன்னிருந்த மாதிரியையும் கூறலானார்.

* * *

அநந்தராமோ பந்துலுவைப் பார்த்ததுதான்—முகம் எப்படியோ மாறிப்போக என்னென்னமோ நினைக்கலானான். சற்று நேரத்திற்குள் அவனைக் கண்டு பந்துலு பயப்படுகிறாரா, அல்லது பந்துலுவைக் கண்டு அவன் பயப்படுகிறானாவென்ற சந்தேகம் உண்டாகும் நிலைமை ஏற்பட்டது. காரணம் என்ன?

ராம பந்துலுவுக்கு விஷயம் ஒன்றும் விளங்கவில்லை; திணறினார்.

அப்போது அநந்தராம் துணிச்சல்கொண்டு:—உட்காருங்கள்.

பந்துலு ஒன்றும் புரியாது பக்கத்தில் காணப்பட்ட ஒரு நாற்காலியில் அமர்ந்தார்.

அநந் :—நீங்கள் ஏழுநாள் காத்திருந்ததற்காக வருத்தப்படுகிறீர்கள், அல்லவா?







என்ற வண்ணம் தம் மேஜைமீதிருந்த பந்துலுவின் கடிதத்தை எடுத்து முன்னே போட்டான்.

பந்துலு ஏழும்பினார்.

அநந்:—இந்த ஏழுநாளும், நீங்கள் என்னைக் காக்க வைத்தீர்களே அந்த ஏழுநாளுக்குத்தான் சமம்.

பந்துலு:—ஒன்றும் விளங்கவில்லையே. நான் எப்போது தங்களை ஏழுநாள் காக்கவைத்தேன்?

அநந்:—விசாகபட்டணத்தில்!

பந்துலு குழம்பினார்.

அநந்:—ஐயா (பந்துலுவின் கைகளை தம் இரு கரங்களாலும் பிடித்துக்கொண்டு) என்னை மன்னிக்க வேண்டும். என்னைத் தெரிகிறதா! நான் தங்களிடம் வேலைக் கலைந்துவிட்டு கடைசியில் திட்டிக்கொண்டு வெளிவந்தேனே, ஞாபகமிருக்கிறதா?

பந்துலு முகம் குன்றியது.

அநந்த:—தங்கள் தயவினாலேயே இந்த நிலைமையை யடைந்தேன்.

பந்து:—தயவா, அதென்ன?

அநந்த:—தங்களிடமிருந்து திருடிய ரூபாய் 1000 தான் என்னை இவ்வளவு பெரிய வியாபாரியாக்கிவிட்டது.

பந்துலு ஆச்சரியத்துடன் விழித்து 'எப்படி' என்றார்.

அநந்த:—ரூபாய் 1000 த்தையும் எடுத்துக் கொண்டு போலீசுக்குப் பயந்து திருநெல்வேலிக்கு ஓடினேன். நல்லவேளை! ஒருநாள் ந்யூஸ் பேப்பரில் 'பஞ்சுப் பஞ்சம்' என்ற சிறு ந்யூஸிருந்தது. எகிப்தில் பயிரில் நோய்விழுந்து நஷ்டமேற்பட்டு விட்டதென்பது அதன் சாரம். எனக்கு எகிப்துப் பஞ்சு நஷ்டமானால் இந்தியாவில் என்ன ஏற்படுமென்பது தெரியும். உடன் 1000 ரூபாயையும் அட்வான்ஸ் கொடுத்து 1000 ஏக்கரிலுள்ள பஞ்சை குத்தகையாக வாங்கினேன். மறுநாள் பஞ்சு விலை 1-க்கு 4 ஆக ஏறிவிட்டது. அதில் ரூபாய் 25 ஆயிரம் கிடைத்தது. அந்த ரூபாயைக் கொண்டுதான்—மேலும் மேலும் லாபம் பெருக—பஞ்சு வியாபாரம் செய்துவருகிறேன்.

பந்துலு உள்ளூர வியப்பும் சந்தோஷமும் கொண்டார். பிறகு (பெருமூச்சோடு) 'தம்பி! நான் மன்னிக்க எதுவுமில்லை. உன் அதிர்ஷ்டம் பணக்காரனாய். நீ எடுத்துக்கொண்ட ஆயிரம் ரூபாயினால் நான் கெட்டுவிட இன்று உன்னிடம் வேலைக்கு வரவில்லை. என் கதி எப்படியோ அதோகதியானது. நீதான் அநந்தராம் கம்பெனி நடத்துகிறாய் என்பது எனக்குத் தெரியாது. நீ க்ஷேமமாக வாழ்வாயாக!" என்று ஆசீர்வதித்தார். அவர் கண்ணில் ஆநந்தக் கண்ணீர் பெருகியது. அநந்தராமும் பந்துலுவின் பெருமநிலையைக் கண்டு கண்ணீர் சிந்தினான். 'கெட்டுப்போனாலும் பொன்குடமாகவேயன்றோ விளங்குகிறார்!' என்று நினைத்தான். அன்றி 'பெரும் முதலாளியாகவிருந்த ஒரு சீமான் ஏழுநாள் காத்திருந்து தன்னிடம் வேலைக்கு வரும் நிலைமைக்கு வந்தாரே' என்றும் கலங்கினான்.

சற்றுநேரத்தில் இருவரும் கட்டித் தழுவிக் கொண்டார்கள்—இதன் அர்த்தமென்ன? சற்று யோசித்துப் பாருங்கள்.

* * *

இன்று அநந்தராம் கம்பெனியின் மானேஜர் திரு. பந்துலு. அவரது மூத்த புதல்வி அநந்தராமின் மனைவியாயிருக்கிறாள். சென்னையில் இருவர் குடும்பமும் ஒன்றாக சிறப்புற்றிருக்கிறது.

# ஒரு வைத்தியர் பேனா

## இந்திய உப்பு—கருப்பத் தடை—நீண்ட ஆயுள் வார்சுரிமையல்ல—பருத்தை குழந்தை.

### இந்தியா உப்பு

முதன் முதலாக சீனி என்ற இனிய பொருள் ஒரு வங்காளியி னாலேயே கண்டு பிடிக்கப்பட்டது. அதனை வெள்ளையர்கள் இந்தியா உப்பு என்று அழைத்தார்கள்.

### தேனீயின் வாயுவேகம்

ஒரு பவுண்டு தேன் சேகரிக்கும் பொருட்டு ஒரு தேனீ சுமார் 43,770 மைல் சுற்றுப்பிரயாணம் செய்கிறதாம். இந்த தூரம் சந்திரனுக்கும் பூமிக்கும் உள்ள தூரத்தில் காற்பங்காகிறது. ஒரு தேனீ ஒரு தடவை செய்யப்படும் பிரயாணத்தில் சேகரிக்கப்படும் பல்வகையான மகரந்தங்களை யாது காரணம்பற்றியும் ஒன்றாகக் கலக்கிவிடாது.

### பருத்த குழந்தை

இந்தியானாவில் (அமெரிக்கா) மிஸஸ். எல்மர் பிளாக் என்னும் மாது ஒரு பையனைப் பெற்றாள். அப்போது எடை 17 பவுண்டு 4 அவுன்ஸ். அமெரிக்காவிலுள்ள குழந்தைகள் அனைவரிலும் அவனது நிறையே கூடுதலாக விருந்தது. ஆனால் ஜார்ஜியாவில் 25 பவுண்டு எடையுள்ள ஒரு குழந்தை பிறந்து இறந்துபோயிற்று. 2,50,000 குழந்தைகட்கு ஒரு குழந்தை 15 பவுண்டு நிறையுடையதாகக் காண்கிறதாம்.

### நீண்ட ஆயுள் வார்சுரிமையல்ல

நீண்ட ஆயுள் ஒருவருக்குப் பரம்பரையாக வந்துகொண்டிருப்பதாக நினைக்கப்படுகிறது. ஆனால் உண்மை அப்படியல்ல. பெற்றோர்கள் சிறு வயதில் காலம் சென்றுவிட்டால் மக்கள் தாமது ஆயுள் குறுகிவிடுமோ என்று சந்தேகங்கொள்ள வேண்டியதில்லை. ஆஸ்திரியாவைச் சேர்ந்த டாக்டர் ஈ. பிரண்ட என்பவர் 75-க்கும் 100-க்கும் நடுவேயுள்ள நூறு பேர்களின் ஆயுள் விருத்தியைப் பரிசிலனை செய்து ஓர் முடிவுக்கு வந்தார். 'ஜர்னல் ஆப் தி அமெரிக்கன் மெடிகல் அஸோசியேஷனில் அவர் நூற்றுக்கு இரண்டு பேரே நீடித்த காலம் வாழ்ந்த குடும்ப பரம்பரையில் தோன்றினவர்களாயிருந்தார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார். இவர்களில் அனேகர் தமது பெற்றோர்களைச் சிறு பிராயத்திலேயே இழந்தவர்களாயிருந்தார்கள். க்ஷயம், பக்கவாதம், சுரம், வயிற்றளைச்சல், கபசுரம், பெரிய ஸஸ்திர சிகிச்சை, பித்த நோய்கள் முதலியன ஒருவரது ஆயுளைக் குறைத்துவிடவில்லை என்று காண்கிறார்.

தீவிரமான மூளை உழைப்பும், தேகப் பிரயத்தனமுங் கூட வாழ்நாளை பாதிக்கவில்லையாம்.

பாரிசிலனை செய்யப்பட்டவர்களிற் பலர் கொழுப்பான உணவை ஆதரிப்பவர்களாயில்லை. அதை விரும்புகிறவர்கள், மரக் காய்கறி வகைகளையும் பழங்களையும் உபயோகித்துக் கொண்டு தானிருந்தார்கள். அனேகர் வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்று தடவை மட்டிலுமே மாமிசம் சாப்பிடும் வழக்கமுடையவர்களாயிருந்தார்கள். பாலில் தயாரிக்கப்பட்ட பதார்த்தங்களே மாலை உணவாக இருந்தது. அவரிடம் மிகவும் முக்கியமாக விளங்கியது வெறுக்கத்தக்க செயல்கள் நிகழ்கின்ற காலத்திலும் அவர்கள் கையாண்ட பொறுமை குணமேயாகும். அத்தனை பேர்களிலும் ஒருவர்தான் சிறிது கோபம் உள்ளவராய் காணப்பட்டார். அதுவும் தோன்றி சிறிது நேரத்துக்குள் மறைந்து போகுமாம்.

### கர்ப்பத் தடை

அமெரிக்கா மெடிகல் சங்கத்தினர் கர்ப்பத் தடைமுறைகளை அங்கீகரித்து விட்டார்கள். கர்ப்பத்தடை தற்போது எங்கும் அமலில் இருக்கிறது. மருத்துவக் கலாசாலைகளில் குழந்தைகள் பெறுங் காலங்களை ஒழுங்குபடுத்தக் கற்றுக்கொடுத்து வருகிறார்கள்.

### தாவரங்களின் வளர்ச்சி

சில நூதனக் கருவிகளால் மரங்களின் வளர்ச்சிக்குரிய காலம் அறியப்படுகிறது. மரங்களின் வளர்ச்சியில் 90 சத விகிதம் இளவேனிற் காலத்திலும், வஸந்த காலத்திலும் உண்டானதாகவே காணப்படுகிறது.

தினந்தோறும் மரத்தடியின் குறுக்களவு 1/1,250 முதல் 1/200 வரையிலும் குறைவதும் கூடுவதுமாகவேயிருக்கிறது. குளிர் காலத்திலும் மழைக் காலத்திலும் வேனிற் காலத்தைப் போல் அல்லாமல் மரத்தடியின் பரப்பு அதிக விசாலமாய்க் காணப்படுகிறதாம்.





# சினிமாக் குறிப்பு

### சினிமாப் படத் தடை நீங்கியது

மத்திய மாகாண, பம்பாய் சர்க்கார் மகாத்மா காந்தியின் செயல்களைக் காட்டிப் பிடித்த படங்கள் மேலுள்ள தடை யுத்தரவை நீக்கிவிட்டனர். அம்மாதிரியே தேசிய சம்பந்தமான செய்திப் படங்களுக்கும் தடை நீங்கியது.

### அனாதைப் பெண்

திருப்பூர் ஜுபிட்டர் பிக்சர்ஸ் கம்பெனியார் ஸ்ரீமதி வை. மு. கோதை நாயகி அம்மாள் எழுதியிருக்கும் அனாதைப் பெண் என்ற கதையைப் படம் பிடிக்கப் போகிறார்களாம். அதில் எம். கே. ராதா கதாநாயகனாக நடிக்கப்போகிறார். கதாநாயகி தேடி வரப்படுகிறாள்.

### அம்பிகாபதி

சேலம் சங்கர் பிலிம்ஸார் கல்கத்தா ஈஸ்டு இந்தியா ஸ்டுடியோவில் மிஸ்டர் டங்கன் டைரக்ஷனில் இப்படத்தைத் தயாரித்து பாதிக்குமேல் முடித்துவிட்டனர். இப்படம் இதுவரை வெளிவந்துள்ள படங்களைவிட பிரகாசிக்கும் எனத் தெரிகிறது. இதில் கதாநாயகராக நடிக்கும் திரு. எம். கே. தியாகராஜ பாகவதர் நிரம்ப உணர்ச்சியுடன், நடிப்புக் கலையை யுணர்ந்து, நடித்திருப்பதாகவும் தெரிகிறது.

### 'சாவித்திரி'யில் தேவிகா ராணி

பம்பாய் டாக்கியின் 'சாவித்திரி'யில் நடித்துள்ள தேவிகா ராணிக்கு, ஐக்ய மண்டல ஸர்க்கார் மந்திரியும், பண்டித ஜவஹரின் சகோதரியுமான ஸ்ரீமதி விஜயலெட்சுமி பண்டிட் கீழ்க்கண்ட செய்தி அனுப்பியிருக்கிறார். இலாஹாபாத்தில் 'சாவித்திரி' படக் காட்சியை ஸ்ரீமதி பண்டிட் ஆரம்பித்து வைத்தாரென்பது குறிப்பிடத் தக்கதாகும்:—

"சாவித்திரி" நீடுழி வெற்றி பெற வேண்டுமென நான் மனப் பூர்வமாக வாழ்த்துகிறேன். நம் நாட்டில் கணக்கற்ற சாவித்திரிகளைத் தட்டி எழுப்ப இப்படம் உதவட்டும். இந்தியப்பெண்மணிகளின் அன்பும், கற்பும் இந்தியா தேசம் இழந்த ஆன்மாவை மீண்டும் பெறச் செய்ய உதவுமென நான் மனப் பூர்வமாக நம்புகின்றேன்.



ஸ்ரீமதி தேவிகாராணி.

### படம் எடுப்பது நின்றது

எல்லைப்புறத்தில் இபி பக்கீரின் தலைமையில் மலை ஜாதியினருக்கும், பிரிட்டிஷ் துருப்புகளுக்கும் சண்டை நடந்து கொண்டிருப்பதால் எம். ஜி. எம். கம்பெனியார் தங்கள் கிம் என்ற படத்திற்கான வெளிக் காட்சிகளை எடுப்பதை ஒத்தி வைத்துள்ளனராம். இப்படத்தில் பிரட்டி பார்த்தலோமியோ பிரதம நடிகர்.

### ஒரே வருடத்தில் நூறு படங்கள்

ஜெர்மனியிலுள்ள மூன்று பெரிய பிலிம் சம்பெனிகள்—டோபிஸ், உபா, டெரா—1937-38 வருஷத்திற்கு நூறு சினிமாப் படங்கள் பிடித்துவிடுவதாகத் தெரிவித்திருக்கிறது. அப்படங்கள் எல்லாம் முழுப் படங்கள்; குறுகிய படங்கள் அல்ல. அவைகளில் சில வியன்னா, ரோம், பேரிஸ், யுனைட்டெட் ஸ்டேட்ஸ் போன்ற இடங்களில் எடுக்கப்படுமாம். சில தேசீய சம்பந்தமான பிரசாரப் படங்களாக எடுக்கப்படுமாம்.

### இரண்டே வாரத்தில் டைரெக்டர் ஆகலாம்!

இங்கிலாந்தில் இருக்கும் சுமார் 200 உபாத்தியாயர்கள் இப்பொழுது கெமிராமென்களாகவும் இரண்டே வாரத்தில் மாறிக்கொண்டு வருகின்னர். 'பிலிம் பள்ளிக்கூடம்' இரண்டே வாரத்தில் அந்தந்தத் துறையில் இவர்களைப் பழக்கித் தகுதியுள்ளவர்களாகச் செய்து வருகிறது. பள்ளிக்கூடத்தில் சிறு பிள்ளைகளுக்கும் படத் தொழிலைப்பற்றிப் போதிப்பதற்காகவே இத் திட்டம் போடப்பட்டிருக்கிறது. இத் திட்டத்தைக் கல்வி போர்டும் ஆதரிக்கிறது. இந்த உபாத்தியாயர்களுக்கு, ஷூட்டிங், கட்டிங், எடிட்டிங் முதலியவைகள் எல்லாம் பிரசங்கங்கள் மூலமும், பிரத்தியக்ஷமாகவும் கற்பிக்கப்படுமாம்,

அவர்கள் பயிற்சிபெற்று வருகையில் அவர்களே படம் எடுக்கவும் சந்தர்ப்பம் அளிக்கப்படுமாம். 15வது தினமுடிவில் இவர்கள் படங்கள் எல்லாவற்றையும் ஒருவருடையதை மற்றொருவராக விமர்சனம் செய்வார்களாம்.

### சாந்த துக்காராமுக்கு சர்வதேசப் பரிசு

வெனிசில் நடைபெற்ற சர்வதேச சினிமாப் போட்டியில் வென்று பரிசு பெற்ற படங்கள் மூன்று. அவற்றிலொன்று பிரபாத் கம்பெனியின் வெளியீடாகிய சாந்த துக்காராம்.

### பிரான்ஸில் நவீன பிலிம் கம்பெனி

பிரான்ஸில் நவீன முறையில் ஒரு படக் கம்பெனியை ஆரம்பித்திருக்கின்றனர். இந்தக் கம்பெனியை பிரஞ்சு சர்க்காரே ஆரம்பித்திருக்கிறது. இதில் பொது ஜனங்கள் யார் வேண்டுமென்றாலும் பங்கெடுத்துக் கொள்ளலாம். பங்கு ஒன்றுக்கு ஆறு பென்ஸ்கள் (சுமார் 6 அணா தான்) படம் வெளியிடப்பட்டதும் பங்கு எடுத்துக் கொண்டவர்கள் எல்லாப் படத்தையும் இலவசமாகப் பார்க்க அனுமதிக்கப்படுவராம். இவ்விதமாக ஆரம்பிக்கப்படும் இந்த படக் கம்பெனி மாபெரும் தேசீயப் படங்களைத் தயாரிக்குமாம். முதலில் 30 லக்ஷம் பிராங்குகள் செலவில் லாமார்ஸேல்ஸ் என்ற படத்தை எடுப்பார்கள். மாரிஸ் ஷிவெலியர் இப் படத்தில் பிரதம பாகத்தில் நடிப்பார்.

### லக்ஷ்மி சினிடோன்

இவர்கள் தெலுங்கில் ராதா கிருஷ்ணனையும், தமிழில் ச்யாமசுந்தரையும் எடுக்கப்போகின்றனர். தமிழ் படத்திற்கு நடிகர்கள் தேர்ந்தெடுத்துக்கொண்டிருக்கின்றனர்.





## பாரதியாரின் ஓர் கடிதம்

நெஞ்சம் இளகி விரிவெய்த, விரிவெய்த, அறிவிலே சுடர் ஏறுகிறது. நம்மிலும் மேலியாருக்கு நாம் இரங்கி அவர்களை நமக்கு நிகராகச் செய்து விட வேண்டுமென்று பாடுபடுதலே நாம் வலிமை பெறுதற்கு வழியாகும். வேறு வழியில்லை.

* * *

ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டுப் பாஷைகள் தெரிந்திருந்து அந்தப் பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன என்பதை நேரே தெரிந்துகொள்ள முடியுமானால் தமிழ்நாட்டிற்கு எத்தனை நன்மை உண்டாகும்! தமிழ், தமிழ், தமிழ் என்று எப்பொழுதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால் புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக்கொண்டே போக வேண்டும்.

* * *

தம்பி! நான் ஏது செய்வேனடா! தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாயிருப்பதை பார்க்கும்பொழுது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான், அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும், மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது.

* * *

தம்பி! உள்ளமே உலகம்.

ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே! நிற்கும் நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டிவைத்துக் கொண்டு பிழைக்க முயற்சிபண்ணும் பழங்காலத்து மூடர்களைக் கண்டு குடல்குலுங்கச் சிரி.

உனக்குச் சிறகுகள் தோன்றுக! பறந்து போ. பற! பற! பற! மேலே, மேலே, மேலே!

* * *

தம்பி! தமிழ்நாடு வாழ்கவென்றெழுது. தமிழ்நாட்டில் நோய்கள் தீர்கவென்றெழுது. தமிழ் நாட்டில் வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் மலிகவென்றெழுது. அந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களிலே நவீன கலைகளெல்லாம் பயிற்சிபெற்று வளர்கவென்றெழுது. தமிழ்நாட்டில் ஒரே ஜாதிதான் உண்டு. அதன் பெயர் தமிழ் ஜாதி. அது ஆர்யஜாதி என்ற குடும்பத்திலே தலைக் குழந்தை என்றெழுது. ஆணும் பெண்ணும் உயிரின் இரண்டு கலைகள் என்றெழுது. அவை ஒன்றில் ஒன்று தாழ்வில்லை என்றெழுது. பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது. பெண்ணை அடைத்தவன் கண்ணை அடைத்தான் என்றெழுது.

* * *

தொழில்கள், தொழில்கள் என்று கூவு. தப்பாக வேதம் சொல்லுபவனைக் காட்டிலும் நன்றாகச் சிரைப்பவன் மேற்குலத்தான் என்று கூவு. வியாபாரம் வளர்க. யந்திரங்கள் பெருகுக. முயற்சிகள் ஓங்குக. ஸங்கீதம், சிற்பம், யந்திர நூல், பூமி நூல், வான நூல், இயற்கை நூலின் ஆயிரங் கிளைகள். இவை தமிழ்நாட்டிலே மலிந்திடுக! என்று முழங்கு. சக்தி, சக்தி, சக்தி என்று பாடு, தம்பி நீ வாழ்க!

* * *

மேலேயிருக்கும் கடிதம், 1915 ஜூலை 19-ந் தேதி புதுச்சேரியிலிருந்து ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதி லோகோபகாரி ஆசிரியர் திரு. நெல்லையப்ப பிள்ளைக்கு அனுப்பினாராம்.



# கப்பல் உடைவு மகாநாடு

## வெட்கம்! வெட்கம்! ஆங்கில வீரத்திற்கு அழகான சோதனை!

மெடிட்டரேனியன் கடலி (மத்திய தரைக் கடலி)ல் ஏதோ மர்ம நீர்மூழ்கியொன்று பிரிட்டிஷ், ஸ்பெயின், ருஷ்யக் கப்பல்களை மூழ்கடித்து வருகிறதல்லவா? அந்தச் செயல் ஐரோப்பா முழுதும் பிரமாதக் கிளர்ச்சியாகிவிட்டது. பத்திரிகைகளெல்லாம் அல்லோல கல்லோலப் படுகின்றன. சில தேசங்கள் தத்தம் கப்பல்கட்காகக் கவலை கொண்டு ஊரூராக தந்தி பேசி யோசிக்கின்றன. இதனிடையே துருக்கி மீசையை முறுக்கிக்கொண்டு "விட்டேனா பார்" என்கின்றது. ருஷ்யாவோ, "இத்தாலிதான் திருடன். அதுதான் நீர்மூழ்கியை விடுக்கின்றது. குழப்பம் செய்வது அதுதான்" என்கின்றது. பிரான்சோ, "இதாலியைத் தவிர குழப்பம் செய்யவேண்டிய தேவை வேறெந்த நாட்டுக்கும் கிடையாது. ஒருகால் பிராங்கோ கலகம் செய்வதென்றால் அவரிடம் சொந்த உபயோகத்திற்கே போதுமான நீர்மூழ்கிகளில்லை" என்கின்றது.

* * *

துருக்கி வெகு பிரயாசையின்பின் சில தினங்கட்கு முன் குழப்பக்கார நீர்மூழ்கியைக் கண்டுபிடித்தது. ஆனால் திடீரென அந் நீர்மூழ்கி அமிழ்ந்து தப்பிக்கொண்டது. அதனால் துருக்கி பெரிதாக எதுவும் செய்ய முடியவில்லை.

கிட்டத்தட்ட அந்த சமயத்தில் ருஷ்யக் கப்பல் ஒன்றின்மீது இரண்டு 'டார்பிடோக்கள்' எய்யப் பட்டனவாம். அதனைப் பார்த்த ருஷ்யக் கப்பல் விரிவான ஒரு செய்தியை வெளியிட்டிருக்கின்றது.

* * *

இவ்வாறு தொல்லை மிகுந்தால் நடவடிக்கையல்லவா எடுத்துக் கொள்ளப்படவேண்டும்? அதற்குப் பதிலாக ஆங்கில வீரர்கள் ஒரு மகாநாடு நடத்த முயல்கின்றார்களாம்.

அந்த மகாநாட்டில் 12 தேசங்கள் கலந்து கொள்ளுமாம். மகாநாடு ஜினிவாவிலிருந்து 12 மைல் தூரமுள்ள நியோன் என்ற விடத்தில் நடைபெறுமாம். கூடும் தேதி செப்டம்பர் 10. சுமார் 60 பிரதிநிதிகள் கலந்து கொள்வார்கள். அவர்களிடையே ஸ்பெயின் இடம் பெறாது. காரணம், இம் மத்தியதரை மகாநாடு யுத்தத்திலிடம் பெறாத இருப்பவர்களின் மகாநாடுதானாம். ஆனால் இதாலிக்கு இடமுண்டு. பாவம்! பிரிட்டன் இத்தாலியை யுத்தத்தில் தலையிடாத நாடு என்று மதிக்கின்றதே! என்ன வீரம்!

ஆனால் இத்தாலி மகாநாட்டுக்கு பிரதிநிதி யனுப்பாது என்று சொல்லப்படுகிறது. இதற்கு இதாலி ஏதேனும காரணம் சொல்லியாகவேண்டுமல்லவா? ஆம், நல்ல காரணம் தருகிறது. "ஏற்கனவே நான் இண்டர்வென்ஷன் கமிட்டி—(நடுநிலைக் கமிட்டி) ஒன்று ஏற்பட்டு வேலைசெய்து வரும்போது புதிதாக ஒரு மகாநாட்டின் தேவையென்ன?" என்று வினவுகிறது. இது நியாயம் தானே!

ஆயினும் இதாலி கூட்டுக் கொள்ளைக்காரனை ஜெர்மனியைக் கலந்து விட்டு எதுவும் பதில் சொல்லுமாம்.

இதற்குள் பிரிட்டிஷ் மந்திரி சபை காலையென்றும் மாலையென்றும் நடு இரவென்றும் யாமமென்றும் பாராது கூடிக்கூடி பிரமாதமாக யோசிக்கிறது. யோசித்து எதற்கு? உலகம் முழுதும் பிரிட்டனை ஒழிக்கக் கங்கணம்தான் கட்டிவிட்டதே!

* * *

இதற்கிடையில் மத்தியதரைக் கடல் மகாநாட்டைப்பற்றி ஸ்ரீ புளும்—அவர் யார் தெரியுமா? பிரான்சில் சில மாதங்கட்குமுன்பு முதன் மந்திரியாகவிருந்தாரே, அவர்—பாரிஸின் சமீபம் லெவிசி என்ற இடத்தில் ஒரு சோஷலிஸ்ட் கூட்டத்தில் பேசிய போது அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

இதாலி ஸ்பெயினில் தலையிட்டு வேலைசெய்து வருவது எல்லாத் தேசங்களை தட்டியெழுப்புவதாகும்.

இதாலி மேற்படி தலையிட்டை சம்மதிப்பதோடு மட்டுமல்லாது விளம்பரப்படுத்திக் கொள்ளவும் செய்கிறது. அந்தத் தேசம் சமீப காலத்தில் ஒரு கொள்ளை தொழிலை ஆரம்பித்து விட்டது. மத்திய தரைக்கடலில் பிரயாணம் செய்யும் கப்பல்களெல்லாம் ஈவிரக்கமின்றி அழிக்கப்படுகின்றன. இந்த செயலை விட்டு வைக்கவோ பொறுத்துக் கொள்ளவோ முடியாது.

இந்த பேச்சு போகட்டும். மத்திய தரை மகாநாடு கூடினால் எப்படி முடியுமென்று நினைக்கிறீர்கள்? அடிதடி வராமல் போகலாம்; ஆனால் குழப்பத்திற்குக் குறைவிராது. இதாலியின் காலித்தனம் முற்றிலும் விளங்கலாமென்று பிரஞ்சுக்காரர்கள் பேசிக் கொள்கிறார்கள்.

### அபிசீனியாவுக்கென்ன?

மத்தியதரைக்கடல் மகாநாட்டினால் ஒரு பெரிய அநீதி நடைபெறுமென்று எக்சல்சியர் என்ற பத்திரிகை கூறுகிறது.

அவ்வநீதி என்ன? அபிசீனியப் பிரசினை ஒழிந்துவிடுமாம்.

எக்சல்சியார் இன்னும் அபிசீனியப் பிரசினை காப்பாற்றப்படுவதாக நினைக்கிறது போலும். பிரிட்டன் போன்ற நாடுகள் அபிசீனியப் பிரச்னை என்று சொல்லிதெல்லாம் வெறும் நாடகமல்லவா?

---

அடுத்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் அக்டோபர் மாதம் முதல் அல்லது மூன்றாவது வாரத்தில் கல்கத்தாவில் கூடுமென்று தெரிகிறது.

## காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி

1937-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 5-ந் தேதி பிற்பகல் 2-30 மணிக்கு ஜில்லாக் கமிட்டிக் கூட்டம் காரைக்குடி காங்கிரஸ் மாளிகையில் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் தலைமையில் கூடிற்று. பதின்மூன்று அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள். கீழ்க்காணும் தீர்மானங்கள் நிறைவேறின.

**தீர்மானங்கள்**

1. விதிப்படி ஸ்தானத்தை இழந்த திருவாளர் டி. ஜீ. ராமசாமி அய்யங்கார் அவர்கட்கு பதிலாக திருவாளர் ஒ. கரு. கா. கார்மேகத்தேவர் அவர்களை தேர்ந்தெடுக்கப்பட்டது.

2. விதிப்படி ஸ்தானத்தை இழந்த திருவாளர் ரா. ஷண்முகம் அவர்களை ரெஸ்டோர் செய்யப்பட்டது.

3. 1937-ம் வருஷம் ஆகஸ்ட்டு 31-ந் தேதி முடிய உள்ள கணக்குகள் படித்துப்பார்த்து ஒப்புக்கொள்ளப் பெற்றன.

4. மாகாணக் கமிட்டியிலிருந்து வந்த திரு. பி. நா. சொ. விசாலாக்ஷியம்மாள் அவர்கள் கடிதம் படிக்கப்பட்டது. ஜில்லா போர்டு அங்கத்தினர் பதவியை ராஜீநாமாச் செய்ய அவர்கட்கு அனுமதிகொடுக்க வேண்டியதில்லை என்று இக்கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

5. திரு. பி. நா. சொ. விசாலாக்ஷியம்மாள் அவர்கள் ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர் பதவி ராஜீநாமா ஒப்புக் கொள்ளப்பட்டது. அந்த ஸ்தானத்திற்கு புல்வாய்க்கரை எஸ். வி. எஸ். ராமசாமி தேவரவர்கள், திருப்பூவனம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

6. திரு. பி. நா. சொக்கலிங்கம் செட்டியாரவர்களின் ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர் பதவி ராஜீநாமா ஒப்புக் கொள்ளப்பட்டது. அந்த ஸ்தானத்திற்கு பாகனேரி திரு. சி. உ. சுப. உடையப்பா அவர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

7. திரு. பி. நா. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் கட்டிட நிதிக் கமிட்டி அங்கத்தினர் பதவி ராஜீநாமா ஒப்புக் கொள்ளப்பட்டது. அந்த ஸ்தானத்திற்கு தேவகோட்டை திரு. ஏ. ரெங்கசாமி அய்யங்கார் அவர்களை தேர்ந்தெடுக்கப் பெற்றது.

8. இடைக்காட்டூர் கிராம பஞ்சாயத்து கோர்ட் தேர்தல் சம்பந்தமாகவுள்ள புகார்பற்றிய கடிதங்கள் படிக்கப்பட்டன. அதுபற்றி விசாரணை செய்ய வேண்டிய அவசியமுண்டா என மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்கு எழுதிக் கேட்டு முடிவு செய்வதென தீர்மானிக்கப் பெற்றது.

9. ஜில்லா போர்டு தேர்தல் சம்பந்தமாக பாக்கியுள்ள திரு வெ. முத்தையா அவர்கள் ரூ. 32-8-0 யும் திரு ச. பி. ந. மு. முகமது இபுறுஹிம் ராவுத்தர் அவர்கள் ரூ. 50 யும் தள்ளுபடி செய்வதென தீர்மானிக்கப் பெற்றது.

10. தெற்கு ராமநாதபுரம் ஜில்லா போர்டையும் வடக்கு ராமநாதபுரம் ஜில்லா போர்டையும் ஒன்றுசேர்க்கக் கூடாதென்றும் இப்பொழுது இருப்பதுபோல் இருபதுவே இப்பகுதிக்கு நலந்தருவது என்றும் இக்கமிட்டி தீர்மானிப்பதுடன் இவ்விஷயத்தை எடுத்து மந்திரிகளிடம் விளக்குவதற்கு திருவாளர்களான ஏ. ரெங்கசாமி அய்யங்கார், முத்து. கரு. அரு. கரு. அருணாசலம் செட்டியார், வ. சொ. ராம. வள்ளியப்பா ஆகியவர்களைப் பிரதிநிதியாக இக்கமிட்டி நியமித்திருக்கிறது.

11. திருப்புத்தூர் தாலுகாவை இரண்டாகப் பிரித்து திருப்பத்தூர் தாலுகா என்று ஒன்றுக்கு பெயர் வைப்பது என்றும், மற்றொன்றுக்கு பள்ளத்தூர் தாலுகா எனப் பெயரிடுவதென்றும், தேவகோட்டை தாலுகாவை இரண்டாகப் பிரித்து ஒன்றுக்கு தேவகோட்டை தாலுகா என்றும், இன்னொன்றுக்குச் திருவாடானை தாலுகா என்றும் இதனை அங்கீகரித்து அனுமதிக்குமாறு மாகாணக் கமிட்டியை இக்கமிட்டி கேட்டுக் கொள்ளுகிறது.

---

### மதுவிலக்குத் திட்டத்திற்கு சென்னைக் கார்ப்போரேஷன் ஆதரவு

சென்னையில் லாகிரிப் பொருள்கள் விற்கப்படும் இடங்கட்காக கார்ப்பொரேஷனால் விதிக்கப்பட்டு கவர்மெண்டார் செலுத்திவரும் தொகை சுமார் ரூ 13,610. சர்க்காரின் மதுவிலக்குத் திட்டத்தை ஆதரிக்கும் முறையில் இதை வஜா செய்துவிட கார்பொரேஷனில் திரு. கே. பாஷ்யத்தால் ஒரு தீர்மானம் கொண்டு வரப்படும். எனவே சென்னை நகரிலும் மதுவிலக்கு முறை ஏற்படுத்த சர்க்காரைக் கேட்டுக்கொள்வார்கள்.

---

### வங்கத்திலும் மதுவிலக்கு

வங்க முதன் மந்திரியான ஜனாப் ஏ. கே. பஸ்லுல் ஹக் மதுவிலக்கு சம்பந்தமாக அதிதீவிர முயற்சி எடுத்துக் கொள்ளப் போவதாய் உறுதியளித்திருக்கிறார். பாமர மக்களிடை பிரசாரஞ் செய்வதற்காக சர்க்காரின் விளம்பர இலாக்காவையும், சமூக ஊழியர்களையும் அனுமதிக்கப்போவதாகத் தெரிவிக்கிறார்.

---

### பம்பாயில் மதுவிலக்கு கமிட்டி

பம்பாய் நகரில் பூரண மதுவிலக்கு முறையை அமலுக்குக் கொண்டு வரும் வேலையில் சர்க்காருடன் ஒத்துழைக்க ஒரு மதுவிலக்குக் கமிட்டி நியமிக்கும்படி திரு. நரிமன் பம்பாய் கார்ப்பொரேஷனில் ஒரு தீர்மானம் கொண்டு வருவார்.

---

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் 2,43,957 மைல் தூரம் ரயில்பாதை போடப்பட்டிருக்கிறது. ஐக்கிய மாகாணத்தின் ஜனத்தொகை உலக ஜனத்தொகையில் ஆறு சதவிகிதமேயாகும். ஆயினும் உலகத்திலுள்ள ரயில்பாதையின் நீளத்தில் 30 சதவிகித தூரம் அங்கே போடப்பட்டுளது.

• • •

அமெரிக்க ஐக்கிய மாகாணத்து மக்களுக்குத் தங்கப் பல் கட்டுவதால் வருஷத்துக்கு 2,5,000,000 ஸ்டர்லிங் பெறுமான தங்கம் சேலவாகிறதாம்.



# ஐக்கிய சீனம்—

## சன்யாட் சன் முதல் இந்நாள் வரை

தொன்மையான நாகரிகம் பெற்ற நாடுகளில் சைனாவும் ஒன்று. ஆதியில் கைத்தொழிலுக்குப் பேர் போனது சைனாவேயாகும். இடைக்காலத்தில் அயல்நாட்டினரின் வியாபாரப் போட்டியால், அதன் வளர்ச்சி குன்றி ஒருவித அடிமை வாழ்க்கையைப் பெற்று, அல்லலுறலாயது. நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கேற்ற மூல சாதனங்களான வியாபாரம், ஏற்றுமதி, இறக்குமதி உரிமை முதலியவைகளை இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா, ஜப்பான் முதலிய நாடுகள் கைக்கொண்டு ஏகபோகமாக அனுபவிக்கத் தலைப்பட்டன. அதனால் நாட்டில் மக்கள் செல்வமிழந்து, உரிமையைப் பறிகொடுத்து, வறுமையடைந்து கொடுங்கோன்மைக்கு அடிமையாகி அவதிப்படலாயினர்.

### கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை

பிறநாடுகளில் முழங்கிக் கொண்டிருந்த ஜனநாயகப் பேரொலி இங்குள்ள மக்கள் காதிலும் ஒலித்தது. அதுகாலை டாக்டர் சன்யாட்சென் என்பவர் (சீனாவில்) முன்வந்து, கோனாட்சியை ஒழித்து, குடியாட்சியை ஸ்தாபிப்பதாக மக்களிடையே பெருமுழக்கம் செய்யத் தலைப்பட்டார்.

அதுகண்டு புரட்சியில் ஆர்வமுள்ள உற்சாகமிக்க இளைஞர்கள் போரின் முன்னணியை அலங்கரித்தனர். அதுவரை நாடு மஞ்சு வம்சத்தினரின் தலைமையின்கீழ் போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகார வர்க்கத்தினரால் ஏதேச்சாதிகாரமாக ஆளப்பட்டு வந்தது. அது போது மக்களிடையே வறுமை மிஞ்சி, கொள்ளை, கொலை அதிகரித்து கட்டுப்பாடற்று பெருங் குழப்பத்தில் மூழ்க, நாட்டில் அமைதியின்மை தாண்டவமாடியது. எனவே ஏதேச்சாதிகாரமாக ஆண்டுவந்தவர்களுக்கும், ஜனநாயகத்தை நிலைநாட்ட ஆவல்கொண்ட புரட்சிக்காரர்களுக்குமிடையே போர் மூண்டது. டாக்டர் சென் புரட்சிக்குத் தலைமை வகித்து மிக்க சாதுர்யமாக நடத்தினார். புரட்சிக்காரர்கள் பல கஷ்ட நஷ்டங்களையடைந்தும் தங்களது போராட்டத்தை விடா முயற்சியுடன் தொடர்ந்து நடத்தி வெற்றி கண்டனர். பீகிங் நகரத்தில் மஞ்சு வம்சத்திய அரசை நீக்கி காண்டன் நகரத்தை தலைமையாகக் கொண்டு ஜனநாயக ஆட்சியை (Republic) ஸ்தாபித்தனர். பின், விவசாயி, தொழிலாளிகளின் உதவிகொண்டு சீனாவில் ஜனநாயக ஆட்சிக்கு இடையூறாகவுள்ள வட மாகாணங்களையும் வென்று, சீனம் முழுமையும் ஒரே ஆட்சி முறையில் நிலைநிறுத்தி, அயல்நாட்டார் சீனத்தில் நுழைந்து இழைத்து வரும் அநீதிகளை அறவே நீக்கி, நாட்டின் வளத்தைக் காத்து, செழிப்பாக்கச் செய்ய வேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு டாக்டர் சென் கட்சியார் பாடுபட்டு வந்தனர். ஆனால் இன்றைக்குச் சுமார் இருபத்து ஆறு வருடங்களுக்கு முன்னர் டாக்டர் சென் கட்சியார் செய்த பெருமுயற்சிகளெல்லாம் விரைவில் தோல்வியுற்றன. காரணம், டாக்டர் சென் கட்சியாருக்கு வேண்டிய-போதிய-சைனிய பலமும், பணபலமும் இல்லாமையேயாகும். மேலும் பல மாகாணத்தார்கள் இவர்களுக்கு எதிரிடையாக விருந்து வந்தனர். தவிர, மஞ்சூரியா அரசாங்கத்தில் பழக்கப்பட்ட ராணுவத் தலைவர்களே சீன தேசத்தில் தலைமை பூண்டு, சர்வாதிகாரிகளாகத் தோன்ற ஆரம்பித்தனர். நாட்டையாளுந்திறமை வாய்ந்த பிரபுகட்குப் பஞ்சமேற்பட்டது. ஜனநாயகத்தின் நன்மை இன்னதென்றறிய மக்களுக்கு வசதியில்லை. மேலும் ஜனங்களிடையே போதிக்க முன்வருவாருமில்லை. இக்நிலைமையில் சைனாவின் குடியாட்சிக்கு முதன் தலைவராக ராணுவத் தலைவர் யுன்ஷிகாய் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தீர்க்காலோசனை யற்றவர். அயல்நாட்டினரின் சதியாலோசனையில் சிக்குண்டு தானே சீனத்தில் ஏகச் சக்ராதிபதியாக முயற்சித்தார். இவையனைத்தும் டாக்டர் சென் அவர்களின் முயற்சி தோல்வி யடையக் காரணங்களாயின. டாக்டர் சென் கட்சியார் மஞ்சூரியாவின் அரசாங்கத்தை முழு பலம் கொண்டு தாக்கி வந்தனர். ஆனால் அவ்வரசாங்கத்தை கைப்பற்றியவுடன் அதற்குப் பதிலாக வேறு ஆட்சி முறை நிறுவவேண்டியதற்குப் போதிய சாதனங்களைக் கொண்டிருந்தனரல்லர். மஞ்சூரியா சிங்காதனம் வீழ்ச்சி கண்டது. மஞ்சூரியா கைவசமாகவே அதற்கு முன்னர் ஜனநாயக ஆட்சியில் ஒரு சட்டத்திற்கு கட்டுப்பட்டு நடந்து வந்த ராணுவத் தலைவர்கள் யாவரும் தான்தோன்றிகளாகி அவரவர்களின் மாகாணங்களில் ஏதேச்சாதிகாரமாக தனியரசு செலுத்தத் தலைப்பட்டனர். இதனால் ஒருவரை யொருவர் பகைத்துக் கொண்டு கட்சிக் கொள்கையை காற்றில் பறக்கவிட்டுவிட்டு சுயநலமே பெரிதெனக் கொண்டு நாட்டைப் பாழ்படுத்திக்கொண்டு வந்தனர்.



### சியாங்கேய்ஷேக் செயல்

இந்நிலையில் டாக்டர் சென் கண்ட புரட்சி இயக்கம் ராணுவத் தலைவர்களின் சுயநல துரோகத்தால் சிதறுண்டது. டாக்டர் சென் கொண்ட கொள்கை ருஷியாவின் சோவியத் தாட்சியின் துணைகொண்டு, அதன் கொள்கைக்கேற்ப சீனாவையும் ஒரு பொதுமக்கள் ஆட்சியுடைய சீனாக ஆக்கவேண்டுமென்பதேயாகும். அவ்வாறே கோமிண்டாங் கக்ஷியார் அதிகாரம் பெற்றிருந்த காண்டன் அரசாங்கம், அக்கொள்கையின்படியே நடந்து வந்தது. இதற்கு நேர் விரோதமாக சீனக் குடியரசுக் கட்சியின் சேனைத் தலைவரான சியாங்கே ஷேக் படிப்படியாகத்தான் சீர்திருத்தம் ஏற்பட வேண்டுமென்றும், தீவிரமாதல் உண்டாகும் அபாயமென்றும் எண்ணங்கொண்ட பிற்போக்கான ஓர் பிதவாதியாக

விருந்து வந்தார். எனவே இவர் ரஷியாவை எதிர்த்துக் கொண்டு, அதன் மீது ஜனங்களிடையே வெறுப்பு ஏற்படும் வண்ணம் பிறநாடுகளால் அதன் ஆட்சி ஒப்புக்கொள்ளப்படவில்லை என்ற காரணத்தைக் காட்டி, சீனா ரஷியாவுடன் சம்பந்தம் வைத்துக் கொண்டால் பிறதேசங்கள் யாவும் நம்மை எதிர்த்து நாசப்படுத்திவிடுமென்றும், தான் தாய் நாட்டின் மேன்மையை பிற நாடுகளின் மூலம் சாதித்துவிடப் போவதாகவும் புகன்று தம் கருத்துக்கு ஜனநாயகக் கட்சியிலுள்ள பலரை இழுத்துக் கொண்டார். இக்கருத்தைக் கொண்டவர்கள் ஜனநாயகக் கட்சியில் மிதவாதிகளாயினர்.

இதற்கு முன்னரே டாக்டர் சென் காலகதி யடைந்துவிட்டார். இதனால் ஜனநாயகக் கட்சியில் சோவியத் அரசாட்சிக்கு பாடுபடும் பொது உடைமை வாதிகள் அருகினர். மிதவாதியான சியாங்கேஷேக் ஜனநாயகக் கட்சியின் சேனைத் தலைவராக விருந்தமையால் பொது உடைமை வாதிகள் அவரை எதிர்த்துப் போராடுவது சாத்தியமாயில்லை. அதனால் பொதுஉடைமையே தனது லட்சியமெனக் கொண்ட டாக்டர் சென்னின் மனைவியார் ருஷ்யாவிற்குச் சென்றுவிட்டார். சியாங்கேசேக் தனது மிதவாத மனப்பான்மைக்குகந்தவாறு சில கொள்கைகளையும், டாக்டர் சென் கண்ட ஜனநாயகக் கொள்கையில் சிலவற்றைக் காப்பியடித்தும் ஒரு அவியலாக உண்டாக்கிக்கொண்டு அவைகளைச் சாதிக்க வழிதேடினார். அதுமுதல் அதாவது நாங்கிங் அரசாட்சியை நிலைநாட்டியது முதற்கொண்டு அவர் ரஷியாவின் பொதுஉடைமைக் கொள்கையை தீவிரமாக எதிர்த்தும், சைனா பொதுஉடைமைக்காரர்களை தன் சைன்ய பலத்தால் அடக்கியும் வந்து கொண்டிருக்கிறார். இன்று சியாங்கேஷேக்கின் ஆளுகைக்குட்பட்டது பதினெட்டு மாகாணங்களாகும். இம்மிதவாதியாகிய சியாங்கேஷேக் சிருஷ்டித்த ஜனநாயக ஆட்சிக்கு தலைவரும் அவரே! ராணுவத் தலைவரும் அவரே!!

சென் கொள்கை

ஆயினும் சீனாவின் தேசிய உணர்ச்சி ஏற்படுவதற்கு விதைவிதைத்தவரான டாக்டர் சென்னின் அரிய ஊழியம் சீனப் பெருமக்களின் மனதைவிட்டு அகன்றுவிடவில்லை. இன்றும் அவரை ஒரு பெரும் தலைவராகக் கொண்டாடி வருவதில் அதிசயமொன்றுமில்லை. அவர் கண்ட கொள்கையின்படி சீனம் முழுமையுமே ஒரு பொதுஉடைமை நாடாக விருந்திருக்குமே' யாகில், இன்று வலிய சண்டைக்கிழுத்து விழுங்க எத்தனிக்கும் ஜப்பான், கனவிலும் சீனாவை நினைக்க இடமிருக்குமா? மேலும் சீனா இன்று ஓர் உலகப் பிரசித்திபெற்ற முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் ஒன்றாக நிற்காதா?

யுத்த அரக்கனுக்குப் பலி

ஜப்பானுக்கு உலகத்தை கட்டியாள வேண்டுமென்ற ஆசை அதிகம். அதற்குவேண்டுவதற்கு முக்கிய மூலப்பொருள்களாகிய நிலக்கரி, இரும்பு' பெட்ரோல் முதலியவைகள் வேண்டும். இவைகள் ஜப்பான் பிரதேசத்தில் சூன்யம். தவிர (1) ஜனப்பெருக்கத்திற் கேற்றவாறு நிலப்பரப்பு கிடையாது. (2) இயந்திரத்தின் மூலம் அபரிமிதமாக உற்பத்தி செய்யப்படும் யுத்த தளவாடங்களை உபயோகப்படுத்த வழியில்லை. (3) தங்கள் நாட்டில் உற்பத்தி செய்யப்படும் சாமான்களை விலையாக்குவதற்கு வேண்டிய மார்க்கெட் தேவை. (4) இதர வல்லரசுகள் அதிகமான காலனிகளை வைத்துக் கொண்டிருப்பது போல், தனக்கும் காலனிகள் வேண்டுமென்ற ஏகாதிபத்திய பித்தம் கொண்டிருப்பது. ஆகிய காரணங்களே ஜப்பானியரை போர் புரியத் தூண்டும் தூண்டுகோல்களாகவிருக்கின்றன. இப்போது சண்டை நடந்து கொண்டிருக்கும் வட சீனாவில் ஜப்பானுக்கு வேண்டிய நிலக்கரி, இரும்பு, பெட்ரோல் முதலியவைகள் நிறையவுண்டு. நிலப்பரப்போ அதிகம். ஜப்பான் சரக்குகளை விற்பனை செய்யத் தகுதியான மார்க்கெட் ஆகியவைகள் நிறைந்துள்ள செழிப்பான பிரதேசத்தை ஜப்பான் மறந்துவிட முடியுமா? இதுதான் இன்று ஜப்பான் சைனாவோடு சண்டை செய்வதற்கு முக்கிய காரணம். வேறு 1931-ல் ஜப்பான் மஞ்சூரியாவை விழுங்கியபோது சீனர்கள் சால்பேயிலுள்ள நாலைந்து மதக்குருக்களை தாக்கினார்களென்ற காரணமும், இன்று தங்களது உரிமை பறிபோகிற தென்று காட்டப்படும் காரணமும் வெறும் வெளிவேஷமேயாகும். ஜப்பானுக்கு சைனாவை விழுங்க வேண்டுமென்பது நீண்ட நாளைய எண்ணம்.

அவ்வெண்ணத்தைப் பூர்த்தி செய்யக் காலத்தையும் நேரத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இன்று உள்ள நிலைமையில் ஐரோப்பிய வல்லரசுகளிடையே பாஸிஸத்தின் சேஷ்டை தலைவிரித்தாட, பழம் பெருச்சாளிகளிடத்தில் பயமும், குழப்பமும் குடி கொண்டிருக்கின்றன. எங்கு உலக மகாயுத்தம் உண்டாகிவிடுமோவென்ற பீதியால் தைர்யமாக ஒரு காரியத்தைச் செய்ய எந்த வல்லரசும் தயங்குகின்றது. இதுதான் சமயமென ஜப்பான் இப்பொழுது சைனாவை விழுங்க கிளம்பியிருக்கிறது. ஜப்பானின் எண்ணப்பிரகாரம் மற்ற வல்லரசுகள்விட்டு விட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்குமாகில், சைனா ஜப்பானுக்கு இரையாவது நிச்சயம். பின் ஆசியாவில் ஜப்பானின் செல்வாக்கு அதிகரித்துவிடும். அப்பால் இந்தியாவும் ஜப்பானின் பார்வையிலிருந்து விலகிவிடுமென்று நாம் நினைத்துவிட முடியுமா?

—தோழர் எம். கே. அழகப்பா.

---

மீனாக்ஷி சொக்கலிங்கம்

ஜில்லா போர்டு

ஆஸ்பத்திரி திறப்புவிழா

பூலாங்குறிச்சி, செப். 12

இவ்வூரில் இன்று மாலை 3 மணிக்கு புதுக்கோட்டை சமஸ்தானம் வலம்புரி டாக்டர் திரு. T. A. மங்களம் பிள்ளை L. M. P. M. L. C. அவர்கள் தலைமையில் ஷை ஆஸ்பத்திரி ஆரம்பிக்கப்பெற்றது. இவ்வூர் பிரபல தனவைசியரும் பாங்கருமான திரு. வ. சொ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களின் பொருளுதவியால் ஷை ஆஸ்பத்திரி ஸ்தாபிக்கப் பெற்றதென்பது இங்கு குறிப்பிடத்தக்கது.



# மலேயா தொழிலாளரும் மதுவும்

## இந்தியர் கவுரவம் வெளிநாடுகளில் பாதுகாக்கப்பட வேண்டுமானால்?

(குள்ளநரி)

உலகில் புதுப் புது நிகழ்ச்சிகள் ஏற்படுவதும், கைநொடிப்பொழுதிற்குள் திடுக்கிடும் மாற்றங்கள் நிகழ்வதும் சர்வசாதாரணமாக உள்ளது. மதமோருபுறம், ஜார் என்ற கொடுங்கோலனது அரசாட்சி ஒரு புறம், அறியாமை ஒரு புறம், இன்னும் பல அரக்கர்கள் ருஷ்ய மக்களை நசுக்கிப் பிழிந்துவந்தனர். புது யுகம் வெடித்தது. இன்று தலைநிமிர்ந்து பல்வேறு துறைகளில் முன்னேற்ற மடைந்து வருகிறது. 1933வரு வரையிலும் (உலக மகாயுத்தத்திற்குப் பிறகு) மானமற்று, கௌரவமின்றி, பல நாட்டார் தத்தம் கால்களிலிட்டு நசுக்கிப் பல உடன்படிக்கைகளைச் செய்து தலையெடுக்க முடியாமல் நடைப்பிணமாகக் கிடந்த ஜெர்மனி, இன்று உலகையே நடுங்க வைக்கிறது. ஹிட்லரென்றால் அரசியல் வாதிகள் சிம்ம சொப்பனம் காண்கிறார்கள். துருக்கியும் அதேமாதிரியாகத்தான். இன்னும் பல நாடுகள் திடீர் திடீரென மாறி முன்னேற்றப் பாதையில் விரைந்து செல்கின்றன.

இந்தியா மற்றவர்களுக்குச் சளைத்ததா? இந்தியாவிலும் புத்தம் புதுப் புரட்சிகள் நிகழாமலில்லை. ஆயினும் இந்தியாவைப் பல தளைகள் சுற்றிக் கொண்டிருக்கிறது: முற்போக்கு வீதியில் ஒரு அடி வைத்தால் பின்புறம் இரண்டடி இழுக்கின்றன. இத் தளைகளெல்லாம் நொறுக்குண்டு சுக்கு நூறாய்ப் போகவேண்டும். அவ்விலங்குகள் ஒன்றாக ஒரே காலத்தில் தொலையப்போகிறதா, அல்லது ஒன்றன் பின் ஒன்றாகவா என்பதை அறியோம்!

கள் அரக்கன்

அடிமை, கொடிய மதங்கள், ஏகாதிபத்தியங்கள், அதன் கோடுக்கு முதலாளிகள், இன்னோர்களெல்லாம் ஏழைகளின் தலையில் கைவைப்பவர்கள், அவற்றுள் கள் அரக்கனே! கொடிது! கொடிது!! அதிலும் விசேஷமாகத் தொழிலாளர்களையே அதிகம் பிடித்தாட்டுகிறது. பிறக்கும்பொழுதே அன்னோர்களுடன் உடன்பிறந்தார் போன்று ஐக்கியமாய் விடுகிறது. வாசகர்கள் வியக்காதீர்கள். அநேக தொழிலாளத் தாய்மார்கள் தங்களது குழந்தைகளுக்கு போதை வஸ்துவை ஊட்டி மயங்கச்செய்து தாங்கள் வருவது வரையிலும் அழாதிருக்கும் பொருட்டு இக்கொடிய வழக்கத்தை இன்னும் கைப்பற்றி வருகிறார்கள். வயதான பிறகு கேட்கவாவேண்டும்! கிடைக்கும் வருவாயோ மிகச் சொற்பம். அதிலும் முக்கால் பங்கிற்கு மேல் வீண் விரயஞ் செய்யப்படுகிறது. அம்மட்டோடா? அறிவு குன்றி, உடல் பலம்போய், மானமின்றி, பலர் எள்ளி நகையாடச் செய்கிறது. இதன் கொடுமைகளை எழுதப்புகின் விரியும்.

சின்னாட்களுக்கு முன் காங்கிரஸ்

மதுவிலக்குப் போரை காங்கிரஸ் நடத்திற்று. தடியடி, சிறை வாசம், பறிமுதல் முதலிய மிருகத்தனங்களுக்குள்ளாய் பலர் பல இன்னல்களைப் புன்முறுவலுடன் ஏற்றார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும், அதன் கூலி ஜரிகைக் குல்லாய்களும் தமது முழுக்கையிருப்பையும் மனிதாபிமானிகள் மேல் பிரயோகித்துப் பார்த்தனர். "நிறுத்தினால் அரசாங்கத்திற்கு வருவாய் குன்றிப் போகும்" என்று கூறி நீலிக்கண்ணீர் வடித்தனர். அரசாங்கம் யாருடையது, யாருக்காக, எவ்வா நடாத்தப்பட வேண்டுமென்பது வேறு விஷயம். அவ்வரசாங்கம் இன்று முற்றும் அழிந்து போகவில்லையாயினும் அவ் ஏகாதிபத்திய இயந்திரத்தை இயக்குவிக்கும் கருவிகள் காங்கிரஸாக மாறியுள்ளது. சட்டரீதியாக மதுவிலக்குப் போரின் யுத்த அரங்கமாகிய சேலம் ஜில்லாவில், தமது முதல் பாணத்தை விட்டிருக்கிறது. வெற்றி கொள்வதும் நிச்சயம். அதன் பார்வை இன்னும் நாலாப் புறங்களிலும் விழாதது வருந்தத்தக்க விஷயமாகும்.

கடல் கடந்தும் விட்டபாடில்லை

வெளிநாடுகளுக்குப் போகும் இந்தியர்களோ? கல்வி கேள்வியறிவற்ற பாமரர்கள். (பெரும்பான்மையோர்) தொட்டதற்கெல்லாம் "முனியாண்டி"யையும் நொண்டிக் கறுப்பனையும், "மாரியாத்தாளை"யும் சுட்டிக் காட்டுபவர். மதுபான வழக்கத்தை மடியில் இறுகக் கட்டிக் கொண்டு போகிறவர்கள். இக்கொடிய பழக்கத்தைத் தாய் நாட்டிலேயே தடுக்கமுடியாதிருக்கும் பொழுது வெளிநாடுகளில் எங்ஙனம் இயலும்? ஆனால் இன்று காலம் மாறியிருக்கிறது.

சாஸ்திரியாரும் மதுவும்

சமீபத்திலே மலேயாவிற்கு சாஸ்திரியார் தூதுக் கோஷ்டி வந்ததும், சின்னாட்களில் பல இடங்களை இறக்கை கட்டிக்கொண்டு பரிசீலனை செய்துவிட்டுப் போனதும், மற்றும் பல விஷயங்களை "ஊழியன்" வாசகர்கள் அறிவர். அதன் உண்மைகளைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள்!

சில இடங்களில் மலாயா அரசாங்கம் இந்திய உழைப்பாளிகள் மீது கருணைகூர்ந்து கள்ளுக் கடைகளை எடுத்தது. மகானும் சாஸ்திரியார் வந்தார். உண்மைகளைச் சரிவர ஆராயாது உடனே எங்கும் மதுபானக் கடைகள் நிறுவப்படவேண்டும் என்றார். அதற்கு என்ன காரணங்கொடுத்

தார் தெரியுமா? "சிலர் சம்ஷி (சோறிலிருந்து எடுக்கப்படும் கொடிய போதைவஸ்து) குடிக்கிறார்கள். அது மிகவும் உடம்பிற்குக் கெடுதல் விளைவிப்பது. ஆதலால் மதுபானக் கடைகளை ஏற்படுத்தினால் சம்ஷீகுடிப்பது நின்றுவிடும் என்று காரணங் கூறினார். நிற்க,

லேபர் கண்ட்ரோலர் தமது அறிக்கையில் "கள்ளுக் கடைகள் எடுக்கப்பட்ட பிரதேசத்தில் 90 சதவீதம் குடிப்பவர்கள் 30 சதவீதமாகக் குறைந்தார்கள்" என்று புள்ளி விபரத்தோடு கூறுகிறார். பின்னும் "மிகச் சொற்பமான சம்ஷி கேஸ்களே எமது இலாக்காவிற்கு வந்தன" என்றும் சாஸ்திரியாருக்கு மறைமுகமாக புத்தி கற்பிக்கிறார். திரு. சாஸ்திரியார் கட்குடிப்பதையொழிப்பதுபற்றி மூச்சுக்கூட விடவில்லை.

பிற்போக்குக் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் தைரியமற்றவர்கள். தலை தெறிக்கும் வேகத்தில் உலகம் முன்னேறும்பொழுது ஆமை வேகத்தில் நடப்பவர்கள் யாரோ ஒரு சிலர் சம்ஷீ குடித்தால் அவர்களைத் தடுக்க வலிமையற்ற தன்மையைத்தான் சுட்டிக் காட்டுகிறது. மேலும் மதுவை ஒழிப்பதால் அரசாங்கம் விரும்புவதாகவும் கூறியுள்ளார் திரு. வில்சன்.

### சீனர்களைப் பாருங்கள்.

இதுவரையிலும் ஒரு சங்கமாவது மதுபானத்தை யொழிக்க முன்வரவில்லை. ஊருக்குப் பல இந்தியர் சங்கங்களுக்குக் குறைவில்லை.

ஆனால் சீனர்களைப் பாருங்கள்! கஞ்சாக் குடிப்பதில் சீனர்களுடன் ஒருவரும் போட்டியிட முடியாது. சமீபகாலம் வரையிலும் சீனர்களை இக்கொடிய பழக்கம் நடைப்பிணமாக்கி வந்தது. ஆறாண்டுத் திட்டத்தை வகுத்தார்கள். கடினமான சட்டங்களை அமுலிற்குக் கொண்டு வந்தார்கள். தாய்நாட்டுடன் நிற்காது; சீனர்கள் வதியும் முடுக்கு, மூலைகளுக்கெல்லாம் பரப்பினர். மலேயாவிலும் முக்கியமான இடங்களில் கஞ்சா—விலக்கு சங்கங்கள் தீவிரமாக வேலைசெய்து கடலில் கஞ்சாவை அமிழ்த்தி வருகிறது. சட்டங்களை மீறினால் அற்பக் குற்றமானாலும் மரணதண்டனை. டாக்டர் F. S. சென் என்பவர் சமீபத்தில் மலாயாவுக்கு இது விஷயமாக விஜயஞ் செய்திருந்தார். அத்தருணம் 'ஆறாண்டுத் திட்டத்தில் 2½ வருடம் கழிந்துவிட்டது. இன்னும் பாக்கியிருக்கும் காலத்திற்குள் அடியோடு விரட்டியடிப்போம். சென்ற வருடத்தில் 1300 பேர்கள் இது சம்பந்தமாக மரண தண்டனை அடைந்தார்கள்" என்று தமது பிரசங்கத்தில் கூறினார். அநேகமாக கஞ்சா குடி ஒழிந்துவிட்டதென்றே கூறலாம். தமது மக்கள் உய்யவேண்டுமென்ற ஊக்கத்தைப் பாருங்கள்!

### இந்தியர் கௌரவம் வெளிநாட்டில் ஓங்கவேண்டுமானால்?

வெளிநாடுகளில் முக்கியமாக மலேயா சம்பந்தப்பட்ட மட்டில் படித்தவர்கள் இந்தியாவிலிருந்து ஒரு குஞ்சுகூட வேண்டாமாம். ஆனால் கூலிகளோ, ஸ்பெஷல் கப்பல்களில் கொண்டுவரப்பட்டுத் தள்ளப்படுகிறார்கள். அவர்களோ பாமர மக்கள். அவர்களது சம்பளமோ மிகச் சொற்பம். அதுவும் தினசரி கிடையாது. கூலியாதலால் அன்றாடம் வேலை செய்தால்தான். மாத முழுதும் வரும்படியில்லை. ஆனால் மது பானம் அனுதினமும் அருந்துவார்கள். அவர்களது பணமெல்லாம் வீண் விரயஞ் செய்யப்படுகிறது. இதைத் தடுத்து, கல்வி ஞானம் போதித்தால்தான் இந்தியர் கௌரவம் வெளிநாட்டில் ஓங்கும்.



## சிங்கப்பூர்

### நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம்

### ஏழாவது வருட ஏழாவது நிர்வாக சபைக் கூட்டம்

ஈஸ்வர வருடம் ஆடி மாதம் 29-ந் தேதி (13—8—1937) வெள்ளிக் கிழமை மாலை 5-15 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. பெரி. பெ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. 12 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

### தீர்மானங்கள்

நாளது 9—7—37உ முதல் 13-8-37உ வரையிலுள்ள கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றன.

ஏழாவது வருட ஆறாவது நிர்வாக சபைக் கூட்ட நிகழ்ச்சிகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்றன.

54-ம் நம்பர் கிட்டங்கியிலிருந்து திரு. பெ. ப. வி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களை நிர்வாக சபை அங்கத்தினராய்த் தேர்ந்தெடுத்தனுப்பிய கடிதம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றது.

நம் சங்கத்திலிருந்து மன்னர் முடிசூட்டு விழாவுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்ததை மன்னர் தம்பதிகள் சந்தோஷமாய் ஒப்புக்கொண்டிருக்கும் விபரம் எழுதிவந்த கலோனியல் செக்ரெட்டரி ஆபீஸ் கடிதம் ரிக்கார்ட் செய்யப்பெற்றது.

மதராஸ் தி இந்தியன் ஓவர்சீஸ் பாங்கிலிருந்துவந்த கடிதங்கள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று ஷேர் சம்பந்தமாக பதில் கடிதம் எழுதுவதென்று தீர்மானிக்கப்பெற்றது.

மலாயன் எஸ்டேட் ஓனர்ஸ் அசோஸியேஷனுக்கு நமது சங்கத்தின் பிரதிநிதிகளாக கோலாலம்பூர் திரு. க. வீ. அழ. மு. நாராயணன் செட்டியாரவர்களையும் திரு. வெ. இராமசாமி செட்டியாரவர்களையும் இருக்கும்படி கேட்டுக்கொள்வதென தீர்மானிக்கப் பெற்றிருக்கிறது.

காரியதரிசியால் வந்தனோபசாரங் கூறப்பெற்று கூட்டம் இரவு 6-10 மணிக்கு முடிவெய்தியது.





மாடம் சியாங்கெய்ஷேக்

சீனக் குடியரசுத் தலைவராகிய சியாங்கெய் ஷேக்கின் மனைவியார். யுத்த சபையில் அங்கம் பெற்றிருக்கிறார். கடந்த ஒரு வாரமாக சீனர் பெற்றுவரும் வெற்றி ஸ்ரீமதி ஷேக்கையும் சேர்ந்ததுதான். இவரது சரித்திரத்திற்கு போன வார ஊழியன் பார்க்க.

—C.B.



ஸி. ஆரும், ஸி. பி. ஆரும்

சென்ற வாரம் சர் ஸி. பி. ராமசாமி ஐயர், 'ஆலயப் பிரவேச விளம்பரமும், பின்னும்' என்பதுபற்றி பேசினார்; திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார் தலைமை வகித்தார். கூட்டம் கோகலே மண்டபத்தில் நடைபெற்றது.

—I.P.P.S.



நிகழ்த்துகிறார் சொற்பெருக்கு

சென்னை சட்ட சபைகள் இரண்டும் ஒன்றாகூடியிருந்த போது கவர்னர் பிரசங்கம் செய்தார். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மந்திரிகளை மந்திரிகளாகப் பாவித்து நடக்கவேண்டுமென்று புத்திமதி கூறினார்.

—P.P.B.

பம்பாய் கோகுலாஷ்டமி

கழிந்த கோகுலாஷ்டமியன்று நடந்த ஒரு ஊர்வலம். கோபாலர்கள் சூழ கிருஷ்ணன் நிற்பதைக் காண்க.

—C.B.





பெயிஸ்பூர் ஞாபகம்

இரு கோபிகள் சூழ கிருஷ்ணன் பெயிஸ்பூர் ரதத்தில் (மாட்டு வண்டியில்) பவனி வருகிறார். இதுவும் பம்பாயில் நடைபெற்ற கோகுலாஷ்டமி விழாதான்.

—C.B.





கோபாலர் டான்சும் ஊர்வலமும்

கோகுலாஷ்டமியன்று பம்பாயில் 'கோபாலர்கள்' நடனத்தோடு ஊர்வலம் வருகின்றார்கள். தேசியக்கொடி கோபாலர்களுடைய கொடியாயிருத்தலைப் பார்க்க.

—C.B.



ஓடிப்போன ரெட்டிகாரு

காங்கிரசிலிருந்து ஓடிப்போன திரு. சி. ஆர். ரெட்டி (ஆந்திர சர்வகலாசாலை வைஸ் சான்சலர்) பச்சையப்பன் கல்லூரி சங்கத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். கையில் தடியோடு இருப்பவர்தான் திரு. ரெட்டி.

—P.P.B.



ஹரிஜன் காலனியில் டாக்டர்

சுகாதார மந்திரியாகிய டாக்டர் ராஜன் போன வாரம் சென்னை கிருஷ்ணம்பேட்டையிலிருக்கும் கோகுல ஹரிஜன் காலனியைப் பார்வையிட்டார். சகாக்கள் புடை சூழ்வதைப் பார்க்க. -P.P.B.



## காரைக்குடியில் பாரதிவிழாக் கமிட்டி

காரைக்குடி, செப். 4உ

செப்டம்பர் 11உ நடக்கவிருக்கும் கவியரசர் திரு. சி. சுப்பிரமணிய பாரதியார் தினத்தைக் காரைக்குடியில் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு விவேகானந்தர் சங்கக் கட்டிடத்தில் உள்ளூர் தேசபக்தர் அடங்கிய பிரபல கூட்டமொன்று நேற்று மாலை நடைபெற்றது. திரு. சா. கணேசன் தலைமை வகித்தார். கீழ்க்கண்டவர்கள் கமிட்டியினராக ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர்:— திரு. மெ. சு. தி. தண்ணீர்மலையான் செட்டியார், உபதலைவர், திரு. சா. அழகப்பன் அவர்கள், காரியதரிசிகள், திரு. வி. பரமசிவன் அவர்கள், திரு. அரு. அருணசலம் அவர்கள்.

கமிட்டி அங்கத்தினர்கள்:— திருவாளர்கள், சா. கணேசன், ராய. சொக்கலிங்கன் (ஊழியன் ஆசிரியர்) பழ மெ. மெ. வெங்கடாசலம் செட்டியார், பழ. மெ. பெரி. மெய்யப்பன், அழ. அழகப்பன், ராம சிதம்பரம், கே. கன்னையா, ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார், கே. கே. என். லெட்சுமணன், சாமி சிவப்பிரசாத், சா. வ. மெ. வெங்கடாசலம், டாக்டர் ஆர். ரத்தினசிங், N. S. கணபதி, T. M. வெங்கடாசலம், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார், முனிஸிபல் கௌன்ஸிலர், N. S. கோபாலய்யங்கார், அ. கா. அல்லாபிச்சை அம்பலம் ஸ்ரீமதி P. சௌந்திரம் வெ. சாமிநாதன், M. சச்சிதானந்தம், தி. ம. நடராஜன், எஸ். எஸ். சாரி, ஏ. பி. பியாரிலால் சர்மா.

ஏழை மாணவர்களுக்கு பாரதி தினத்தன்று பாரதி பாடல் புத்தகம் வாங்கி இனமளிப்பதென்றும், பாரதி படம் வைத்து ஊர்வலம் நடத்துவதென்றும், மாலையில் காந்தி சதுக்கத்தில் பொதுக்கூட்டம் நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

கூட்டத்திலேயே சுமார் 40 ரூபாய் வரை நன்கொடையாகப் பல கனவான்கள் உதவுவதாக வாக்களித்தனர்.

## தேவகோட்டை

### பாரதி சங்கம்

26—8—37-ந் தேதி மாலை 5-30 மணிக்கு பாரதி சங்கச் சார்பில் சரஸ்வதி வாசகசாலைக் கட்டிடத்தில் ஒரு கூட்டம் நடைபெற்றது. திரு. பொ. திருகூடசுந்தரம் பிள்ளை M.A B.L. அவர்கள் தலைமை வகித்தார்கள். ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் திரு. C. R. வாசுதேவ சர்மா அவர்கள் 'கம்பர்' என்பதுபற்றி பேசினர்கள். கவி பாரதியின் விழாவை கொண்டாட வேண்டியதன் அவசியத்தைப் பற்றி திருகூடசுந்தரம் பிள்ளை அவர்கள் பேசினர்கள். பிறகு ஷை விழாவை செப்டம்பர் 11-ந் தேதி சிறப்பாகக் கொண்டாடவேண்டி திரு. சோம. செல்லப்பா அவர்களைத் தலைவராகவும் திரு. சி. இராமநாதன் அவர்களைக் காரியதரிசியாகவும் கொண்ட பதின்மூன்று பேர்களடங்கிய பாரதி விழாக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. பாரதி பாட்டுப் போட்டிகளும் ஏற்படுத்தப்பட்டன. இரவு 8-30 மணிக்கு கூட்டம் கலைந்ததென காரியதரிசி திரு. வ. முத்தையா அறிவிக்கிறார்.

* * *

## கொழும்பில் மஹாகவி பாரதியாரின் ஜெனன விழா

### தனவைசிய இளைஞர் சங்கத்தார் கொண்டாடுகின்றனர்

தமிழகத்தைத் தட்டி எழுப்பிய ஆண்மையாளனும், தமிழ்த் தாயின் வீரமைந்தனுமான மஹாகவி சுப்பிரமண்ய பாரதியாரின் ஜெனனவிழவை 11-9-37 தேதியன்று சிறப்பாகக் கொண்டாட கொழும்பு தன வைசிய இளைஞர் சங்கத்தார் ஏற்பாடு செய்து வருகின்றனர். தேசபக்தி மிக்க திரு. செ. ராம. வள்ளியப்ப செட்டியார் அவர்கள் இவ் விழாவிற்கு தலைமை பூண்பார்கள். பாரதியார் உருவப்படமொன்றும் திறந்து வைக்கப்படும். பாரதியாரின் ஆவேசப் பாக்கள் பல உணர்ச்சியுடன் பாரதித் தொண்டன் என்பவரால் பாடப்பெறும். அது போது பல அறிஞர்கள் வீரகவி பாரதியைப் பற்றி சொற்பெருக் காற்றுவார்கள். இலங்கைவாழ் தமிழ்மக்கள் பாரதியார் விழாவில் பெரிதும் கலந்து சிறப்பித்தல் கடமை என சங்கத் தலைவர் ஸ்ரீ MR. S. M. கதிரேசன் எழுதுகிறார்.

## நமது தாத்தா

(பாலபோதகர் மு. த. பிள்ளை)

சுந்தரப் புன்னகையும்—உயர்
சுத்தமாம் சற்கதர் தானணி
மேனியும்
சிந்திக்கும் போதினிலே!—வீரச்
சிந்தையும் தோன்றுதே; செந்தமிழ்
முன்னைப்
பந்தம் அகற்றிடவே!—உள்ளம்
பாயுதே மாபெரும் வெள்ளம்போற்
பொங்கி
சாந்தத் திருக் காந்தி—தாத்தா
சத்திய மீதுரை பொய்யல்ல
வாழ்க. (சுந்) 1.

உன்னையுள் எண்ணையிலே—அச்சம்!
ஓடுதே; உள்ளம்விட் டோங்குதே
வீரம்;
அன்னை மனந் தளர்ந்து—நின்ற
தட்சணம் அஞ்சாதே! என்றுரை
தந்து
முன்கரி தன்னின் முன்னே—உற்ற
மூலம்போ லுற்றவன் சீர்மிகச்
செய்தாய்;
வன்னத் தமிழ் மகனே!—நின்னை
வாழ்த்தியெக் காலும்மே போற்று
தல் செய்வோம். (சுந்) 2.

பாதையிலே மறைந்த—கை
ராட்டினை நாடுமே நாடிய சீர்பெற
மேதினி தன்னினிலே!—மீண்டும்
மீண்டியே நன்மையும் மேன்மையு
மீந்தாய்;
சாதிச் சமயங் களின்—சண்டை
சச்சர விம்மியும் ஆகாது வென்னவே
நீதிகள் காட்டி வைத்தாய்;—தாத்தா!
நீடூழி நீவாழ்கப் பாடுவோம் நாளும்.
(சுந்) 3.

## மேலூர் தாலூகா மூன்றாவது அரசியல் மகாநாடு

மேலூர் தாலூகா மூன்றாவது அரசியல் மகாநாடு 19-8-37உ நாவினிப்பட்டிக் கிராமத்தில் வெகு விமரிசையாய் நடந்தேறியது.

பகல் 11 மணிக்கு தலைவரவர்களை மேளவாத்திய முழங்க ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டு மந்தைச் சாவடிக்கு முன்பாக மதுரை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் ஹாஜி முகமது மௌலானாஸாஹிப் அவர்களால் தேசியக் கொடியேற்றுவிக்கப்பட்டு கமலாநேரு வாசகசாலையின் முன்பாகயிருக்கும் கட்டிடத்தில் கதர்க் கண் காக்ஷிசாலையை மதுரை முனிசிபல் சேர்மன் ஸ்ரீமான் என். எம். ஆர். சுப்பராமன் அவர்கள் திறந்துவைத்து கதரின் மகிமையையும் அதன் அவசியத்தையும் பற்றி நீண்டதோர் பிரசங்கம் புரிந்தார்.

அலவாக்கோட்டை ஸ்ரீமதி பி. என். ஜி. விசாலாக்ஷி அம்மாளவர்கள் மகாநாட்டைத் திறந்துவைத்தார்கள். ராயவேலூர் ஸ்ரீமான் வி. எம். உபயதுல்லா அவர்கள் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார்கள். வரவேற்புக் கமிட்டித்தலைவர் ஸ்ரீமான் கே. சிமானம்பலம் அவர்கள் வந்திருந்த தலைவர்களையும் மற்றுமுள்ள ஏனையோர்களையும் வரவேற்றுபசரித்தார்கள். பகல் 1 மணிக்கு நண்பகல் உணவு சுமார் 1000 பேர்களுக்கு இனிமையாக வழங்கப்பெற்றது.

பிற்பகல் மணி 3-க்கு மகாநாடு ஆரம்பமாகி உலகம் போற்றும் உத்தமர் நம் மஹான் காந்திஜீ அவர்களின் திருவுருவப் படத்தை பசும்பொன் ஸ்ரீமான் உ. முத்துராமலிங்கத் தேவரவர்கள் திறந்து வைத்தார். இந்திய முடிசூடா மன்னரென விளங்கும் ராஷ்ட்ரபதி ஜவஹர்லால் நேரு அவர்களின் திருவுருவப் படத்தை பாகனேரி ஸ்ரீமான் ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் திறந்து வைத்தார்கள். நமது பிரதம மந்திரி சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் திருவுருவப் படத்தை மதுரமித்திரன் ஆசிரியர் ஸ்ரீமான் என். சுப்ரமண்யம் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

விவசாயிகள் மகாநாட்டை மட்டப்பாறை சிங்கம் ஆர். எஸ். வெங்கிடராமய்யரவர்கள் திறந்து வைத்தார்கள். மேற்படி மகாநாட்டுக்கு பாகனேரி ஸ்ரீமான் எஸ். ஒ. எஸ். பி. உடையப்பா அவர்கள் தலைமை வகித்தார்கள். மதுரை ஸ்ரீமான் எல். கிருஷ்ணசாமி பாரதி அவர்கள் வரப்போகும் ஜில்லா போர்டு தேர்தல் விஷயமாய் அரிய சொற்பொழிவாற்றினர்.

மற்றும் பல பெரியோர்களால் கொண்டுவரப்பட்ட தீர்மானங்கள் தலைவரவர்களால் நிறைவேற்றப் பெற்றது. மாலை 6-40 மணிக்கு கீழையூர் ஸ்ரீமான் குப. சுப. கருப்பையா செட்டியாரவர்களால் தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரங் கூறப்பெற்று கூட்டம் இனிதுற முடிவுற்றது.

---

## காளையார் கோவில்

### ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலை முதலாவது ஆண்டு விழா

3-9 37 இவ்வூர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலையின் முதலாவது ஆண்டு விழா இன்று மாலை 4 மணி முதல் 8 மணிவரை கொண்டாடப்பட்டது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் திரு உருவப் படத்தை அதற்கென அலங்கரிக்கப்பட்டிருந்த ரதத்தின் மீது அமர்த்தி தலைவருள்பட மற்ற பிரமுகர்களுடனும் வந்தே மாதர கோஷ்டியுடனும் மேளவாத்தியம் முழங்க ஊர்வலமாக வந்து பாகனேரி ஸ்ரீமான் ஆர். வி. சாமிநாதனவர்களால் தேசியக் கொடி ஏற்றி வைக்கப்பட்டது. பின்பு பாகனேரி ஸ்ரீமான் சி. உ. சுப. உடையப்பா அவர்களுக்கும் ஆர். வி. சாமிநாதன் அவர்களுக்கும் வரவேற்பு பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. அதன் பின்னர் ஸ்ரீமான் உடையப்பா அவர்களின் தலைமையில் ஸ்ரீமான்கள் ஆர். வி. சாமிநாதன், கா. வெ. சேது. ராமச்சந்திரன் அவர்களால் தேசியக் கொடியின் கிளப்பைப்பற்றியும் அதை நாம் கௌரவிக்க வேண்டிய முறைகளைப்பற்றியும் வாசகசாலையின் அவசியத்தைப்பற்றியும் நமது தேச மக்களின் நன்மைக்காக உழைத்துவரும் காங்கிரஸ் மகா சபையைப் பற்றியும் அதில் தியாகம் செய்து கொண்டுவரும் மாபெரும் தலைவர்களைப்பற்றியும் கதரையும் கைத்தொழிலையும் நம் நாட்டு மக்கள் முக்கியமாய் ஆதரிக்க வேண்டுமென்பதைப் பற்றியும் அந்நியர்களின் ஆட்சியால் நடைபெறும் அட்டூழியங்களைப் பற்றியும் மிக விரிவாகவும் உணர்ச்சி ததும்பும்படியாகவும் முறையே சொற்பொழிவாற்றினர்கள்.

அதன் பிறகு வாசகசாலையின் நிர்வாகஸ்தர்கள் அடியிற்கண்டபடி தேர்ந்து எடுக்கப்பட்டார்கள். தலைவர் சிவ. கண. சிவஞானமூர்த்தி, உபதலைவர் சொ. வ. காளிமுத்து பிள்ளை, காரியதரிசி மு. ராமசாமி, உபகாரியதரிசி கா. அ. முத்தையா, பிள்ளை, பொக்கிஷதார் அ. மு. பொ. செம்புகேஸ்வரபாண்டிய பிள்ளை.

பிறகு தலைவர் அவர்களின் முடிவுரை கூறி வாசகசாலையின் சார்பாக ஸ்ரீமான் மு. ராமசாமி அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பட்டு கூட்டம் இனிது கலைந்தது.

---

## மதகுப்பட்டியில்

### திரு. தேவநாயக ஐயா முதலியோர் பிரசங்கம்

1-9-37-ந் தேதி மாலை 5 மணிக்கு மதகுபட்டி கிராமக் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் ஸ்ரீமாந் சுப. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. அவ்வமயம் ஸ்ரீஜத் S. A. தேவநாயக ஐயா அவர்களும், ஸ்ரீஜத் பாரதநேசன் அவர்களும், S. O. S. P. உடையப்பா அவர்களும், ஸ்ரீஜத் R. V. சுவாமிநாதன் அவர்களும் சொற்பொழிவாற்றினர்கள். உரையாளர்கள் முக்கியமாக மதுவை ஒழிக்க வேண்டுமென்றும் காங்கிரஸ் மந்திரி சபையுடன் ஒத்துழைக்க வேணுமென்றும் காங்கிரஸில் அங்கத்தினராகச் சேரவேண்டுமென்றும் பொது ஜனங்களைக் கேட்டுக்கொண்டார்கள். காரியதரிசியால் வந்தனோபசாரங் கூறிய பின்னர் கூட்டம் இனிது முடிவுற்றது.



சோவியத் ருஷ்யா

# கடலடியில் ரயில் பாதை

## மூன்று கண்டங்களை இணைக்கும் சங்கிலித் தொடர்

### சோவியத்தில் சோர்வில்லா முயற்சி

உலகம் முழுவதையும் ரயில் பாதை மூலம் ஒன்றாக இணைத்துவிட வேண்டுமென்று ஒரு பெரும் முயற்சி இப்போது செய்யப்பட்டு வருகிறது. அதாவது, ஆசியாக்கண்டமும், ஐரோப்பாக் கண்டமும் ஏற்கெனவே நிலத்தின் மூலம் இணைக்கப்பட்டிருக்கின்றன. இப்போது, இந்த ஆசியாவின் கிழக் கோடியையும், அமெரிக்காவின் மேற்குக் கோடியையும் ஒன்றாய் இணைத்துவிட வேண்டுமென்று ருஷியர் விரும்புகின்றனர். ஆசியாவின் கிழக்கோடி ஸைபீரியாவிலுள்ள கிழக்கு முனையிலிருந்து, வட அமெரிக்காவின் மேற்குக் கோடியாகிய பிரின்ஸ் ஆப்வேல்ஸ் முனை வரைக்கும் இடையில் பேரிங் கடல் இருக்கிறது. இக்கடல்தான் ஆசியாவையும் அமெரிக்காவையும் பிரிக்கிறது. இரு கண்டங்களுக்கு மிடை இதன் அகலம் 38 மைல் தானும்.

எனவே, இந்த 38 மைல் தூரத்தையும் கடலடியில் குடைந்து சுரங்க ரயில்பாதை போட்டு இரு நாடுகளுக்குமிடை இணைப்பு ஏற்படுத்திவிடலாமென்று ஸோவியத் இஞ்சினீர்கள் ஒரு திட்டம் போட்டு ஸ்டாலினிடம் சமர்ப்பித்திருக்கின்றனர். இவ்வாறு ஒரு ரயில்பாதை போடுவதால் உலகின் 3 பெரிய கண்டங்கள் ஒன்றாக இணைக்கப்பட்டுவிடும்.

இப்போது ஸைபீரியாவில் ஓடிக்கொண்டிருக்கும் டிரான்ஸ் ஸைபீரிய ரயில்வேயானது ஐரோப்பாவின் மேற்குக் கோடியிலிருந்து புறப்பட்டு ஆசியாவின் கிழக்குக் கோடிவரை ஓடுவதன்மூலம் இரு கண்டங்களையும், இணைத்துக் கொண்டிருக்கிறது. இந்தப் புதிய ரயில் பாதையைக் கிழக்கு முனைவரை நீடித்துவிட வேண்டியதும் சுரங்கம் தோண்ட வேண்டியதும் தான் பாக்கி. இப்புதிய பாதை மூலம் ஐரோப்பாவிலிருந்து அமெரிக்காவுக்குப் பிரயாணிகள் ரயில் மூலம் துரிதமாகப் போய்விடலாம். சாமான்களும் அதிகம் அனுப்பி வைக்கலாம்.

இந்த 38 மைல் வரையிலும் பேரிங் கடலுக்கடியில் பாறைகளைக் குடைந்தே சுரங்கப் பாதை ஏற்படுத்த வேண்டுமென்றும் திட்டமிடப்பட்டிருக்கிறது. வழியில் கடலில் இரு தீவுகள் இருக்கின்றன. எனவே, 4 இடங்களிலிருந்து இந்தச் சுரங்க வேலை ஆரம்பிக்கப்படுமாம். அதாவது ஆசியாவின் கடற்கரையிலிருந்து ஒரு தீவுவரை இக்கரையிலிருந்தும் அக்கரையிலிருந்தும் வேலை துவங்கப்படும். அதேபோல இன்னொரு தீவிலிருந்தும் அமெரிக்காக் கரையிலிருந்தும் வேலை துவங்கப்படும். இரு தீவுகளையும் இணைக்கும் வேலை வேறு துவங்கப்படும். இந்த வேலைகள் முடிந்து இந்த மூப்பெரும் கண்டங்களும் இணைக்கப்பட்டால், ஆபிரிக்காவை ஜிப்ரால்டரிலும் ஆஸ்ட்ரேலியாவை நியூகினி, பிலிப்பைன் தீவுகள், சுமாட்ரா, ஜாவா, முதலிய தீவுகள் மூலம், மலேயாவிலும் இணைத்துவிடுவது கஷ்டமாகத் தோன்றாது.

---

## வீணை மாட்டிக் கொள்ளாதீர்கள்

### பாஸிஸ்ட்களே ஜாக்கிரதை!

### ருஷிய பத்திரிகைகள் எச்சரிக்கை

'டிமீர்யாஜேவ்' என்ற ருஷியக் கப்பலையும் "பிளேகோயவ்" என்ற ருஷியக் கப்பலையும் மத்தியதரைக் கடலில், ஒரு மர்ம சப்மரீன் மூழ்கடித்ததல்லவா? இது சம்மந்தமாக இத்தாலியைக் கடுமையாகத் தாக்கும் கட்டுரைகள் ஸோவியத் பத்திரிகைகளில் பிரசுரிக்கப் பட்டிருக்கின்றன. "பிராவ்டா" என்ற பொதுவுடைமைப் பத்திரிகை பின் வருமாறு எழுதுகிறது:—

'மிகுந்த சக்தி வாய்ந்த சிவப்பு ராணுவமும், நிரம் நிறைந்த சிவப்புக் கடற்படையும் படைத்துள்ள மகத்தானதோர் பாமர மக்களின் (ருஷ்யா) வல்லரசிடம் தாங்கள் தகரார் வைத்துக்கொள்வதை இத்தாலிய பாஸிஸ்டுகள் மறந்துவிட்டார்கள்போல் தோன்றுகிறது. இத்தாலிய பாஸிஸ்டுகளின் புதிய குற்றம் ஸோவியத் ஸர்க்காருக்கு மட்டுமின்றி, சமாதானத்தைக் காப்பாற்றுவதில் சிரத்தையுள்ள எல்லா நாடுகளுக்குமே ஆத்திர மூட்டத்தக்க ஓர் அறை கூவலாகும். இத்தாலிய பாஸிஸ்டுகளின் திமிர்பிடித்த, ஆத்திர மூட்டும் அக்கிரமங்களை ஸோவியத் ஸர்க்கார் சகித்துக்கொண்டிருக்கப் போவதில்லை."

"இஜ்வெஜ்டியா" என்ற ருஷிய ஸர்க்கார் பத்திரிகையும், இந்தக் குற்றமிழைத்தது இத்தாலிதான் என்று கூறுகிறது.

---

## சேவகர்களுக்குக் கதராடை

ஐக்கிய மாகாணப் பிரதிநிதி சபைத் தலைவரான பாபு புருஷோத்தமதாஸ் தாண்டன் பிரதிநிதி சபை இலாகா சேவகர்களுக்கு எல்லாம் கதராடை யளிக்கவேண்டுமென்றும் சாத்தியமானவரை இலாகாவுக்கு வாங்கும் சாமான்களெல்லாம் சுதேசி சாமான்களாக இருக்க வேண்டுமென்றும் உத்தரவிட்டிருப்பதாகத் தெரிகிறது.

## கடன் பத்திரங்களும் பங்குகளும்

(ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

சென்னை, செப். 7.

| சர்க்கார் கடன் பத்திரங்கள் :— | வாங்கும் விலை | விற்கும் விலை |
|---|---|---|
| | ரூ. அ. | ரூ. அ. |
| 2½ % புதிய கடன் 1948-52 (வரியுள்ளது) | 100—4 | 100—6 |
| 3 „ 1941 (வரியுள்ளது) | 104—6 | 104—8 |
| 3 „ 1951–54 „ | 101-11 | 101-13 |
| 3 „ ஜி. பி. நோட்ஸ் „ | 87-13 | 87-15 |
| 3½ „ „ „ | 97—4 | 97—6 |
| 3¾ „ 1947–50 „ | 106-13 | 106-14 |
| 4 „ 1943 „ | 108—6 | 108—8 |
| 4 „ 1960–70 „ | 112-15 | 113—1 |
| 4½ „ 1955–60 | 118—7 | 118—9 |
| 5 „ 1939–44 „ | 105-13 | 105-15 |
| 5 „ 1940–43 „ | 108—5 | 108—7 |
| 5 „ 1945–55 (வரியில்லாதது) | 120—6 | 120—8 |
| 5½ „ 1938–40 (வரியுள்ளது) | 104—2 | 104—4 |
| 3 „ 1956–61 மைசூர் (வரியில்லாதது) | 100-14 | 101—2 |
| 3½ „ 1951–58 „ „ | 106—3 | 106—7 |
| 4 „ 1953–63 „ „ | 111—8 | 111-12 |
| 5 „ 1955 „ „ | 123—6 | 123-10 |
| 5½ „ 1938 „ „ | 103—6 | 103-10 |
| 6½ „ 1940 „ „ | 110—2 | 110—6 |
| 6½ „ 1941–51 „ „ | 115—6 | 115-10 |
| 3½ „ 1956–61 கொச்சின் „ | 103—0 | 103—8 |
| 5 „ 1943–53 கொச்சின் | 110—0 | 110—8 |
| 3 „ 1956 திருவாங்கூர் | 103—0 | 103—8 |

| பாங்கி:— | | | ரூ. |
|---|---|---|---|
| ரிஸர்வ் | பாங்க் | | 125/10 |
| இம்பீரியல் | „ | F. P. | 1,635/ |
| „ | „ | P. P. | 382/ |
| இந்தியன் | பாங்க் | (Big) | 128 x. d. |
| „ | „ | (Small) | 27 x. d. |
| ஸெண்டிரல் | „ | | 31/8 x. d. |

வெள்ளி:—(சென்னை)

தங்கம்—(சென்னை)

ப்ரோச் பஞ்சு—(பம்பாய்)

ஜாமீன்—ஆகஸ்டு.

## ரயில் போக்கு வரவு

### மதருஸ்-எழும்பூர்

#### மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 35 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 00 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 00 | காலை 10 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 6 00 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 25 | காலை 5 15 |

#### கார்டு லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாஸஞ்சர் .... | காலை 11 35 | மாலை 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 5 | காலை 7 15 |

### மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் | மாலை 8 30 | காலை 8 00 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 7 55 | மாலை 5 10 |
| பம்பாய் மெயில் | மாலை 9 00 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 45 | மாலை 4 55 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 10 |
| „ எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | காலை 2 00 |
| „ பாஸஞ்சர் .... | காலை 6 30 | மாலை 7 45 |
| „ „ .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 1 5 | காலை 1 45 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 6 30 | காலை — |
| காட்பாடி பாஸஞ்சர் .... | 5 30 | 9 45 |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 20 |
| புனா மெளண்டன் எக்ஸ்பிரஸ் ... | 9 16 | 5 30 |



# மந்திரி மாற்றங்கள்

### "நான் புதியவனல்ல.

பழைய ஆள்தான். நீங்கள் மந்திரியாக்கினீர்கள்; நான் மந்திரியாக விருக்கிறேன். நீங்கள் வேண்டாமென்றால் நான் வெளிவந்துவிடக் கூடும். மந்திரியானதால் நான் மாறிப்போகவில்லை. ரூபாயைச் சில்லறையாக மாற்றலாம்; சில்லறையை ரூபாயாகத் திருப்பலாம். அதுமாதிரிதான் நான் மந்திரியாவதும் திரும்பி வருவதும்."

### "எப்போதுமே நான் ஊழியன்;

உங்களது தோழன். ஆகவே மாலை மரியாதை தேவையில்லை. காந்திஜீ மலர்மாலை போடுவதை விட கதர் நூல் அணிவது சிறந்ததென்று ஒருகாலத்தில் சொன்னார். ஏனெனில் கதர் நூல் பல வழிகளில் உபயோகப்படலாம்."

### என்றார் ராஜாஜி

ஐந்தாம் தேதியன்று சென்னை ஜில்லா காங்கிரசை திறந்து வைக்கும்போது, மேலும் அவர் கூறியதாவது:—

### இப்போது நம் கையில்

கொஞ்சம் சர்க்கார் உரிமை கிடைத்திருக்கிறது. ஆதலால் ஒருவாறு சர்க்காரை நடத்தி வருகிறோம். பொதுஜனங்களில் பலர் காங்கிரசே சர்க்கார் என்று கருதி வருகிறார்கள். எனவே நீங்கள் சர்க்காரைக் குறை கூறும்போது அல்லது சர்க்கார் வீழ்க என்று முழங்கும்போது காங்கிரஸ் சர்க்காரைத்தான் விழச்சொல்கிறார்கள் என்று சாதாரண ஜனங்கள் கருதிவிடக் கூடும். சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் பலர் அப்படி நினைத்து விடலாம். ஆகவே சர்க்காரைத் தூஷிப்பதில்கிரமப்பக்கவனம் செலுத்த வேண்டும்,

### சர்க்கார் வீழ்க!

என்று முழங்கினால் நீங்கள் எந்த சர்க்காரைக் குறிப்பிடுகிறீர்கள் என்பது பொதுஜனங்கட்கு நன்குகப் புரிய வேண்டும்.

### நீதி நெறியை

நாம் கைவிடலாகாது. நமது வெற்றிக்கு நம் சத்தியமும் நன்னெறியுமே காரணமாகும். இப்போது சட்ட சபையில் எதிரிகளெல்லாம் கண்ணியமாகப் பேசுகிறார்கள். அவர்களுடைய பேச்சில் அன்பு மிளிர்கின்றது. அதன் காரணம் நமது சத்யமும் தர்ம புத்தியுமேயாகும்.

### சர்க்கார் சிப்பந்திகளைப்பற்றி

பேசும்போது சற்று கவனித்துக் கொள்ளவேண்டும். இதுகாறும் அவர்கள் பிரிட்டிஷ் சர்க்காரை நம்பி ஏதேதோ செய்து வந்தார்கள். இப்போது நம் கீழ் அவர்கட்கு வேலை செய்ய வேண்டுவதாக விருக்கிறது. எனவே ஏமாற்றமடைந்துள்ளார்கள். அப்படிப்பட்டவர்களை இன்னும் குறை கூறினால் வெகுவாக மனம் நோவார்கள்.

### அவர்கள்

எப்போதும் காங்கிரஸ் ஆட்சியே இருந்துவரட்டும் என்று நினைக்கும்படியாக நாம் நடந்துகொள்ள வேண்டும்.

### ரிப்போர்ட்டர்கள்

தயவுசெய்து கவனமாகக் கேட்டு பத்திரிகைகட்கு எழுத வேண்டும். மொழி பெயர்ப்பவர்களும் அதே மாதிரி கவனம் செலுத்த வேண்டும். சில நாட்களுக்கு முன் நான் போலீசாருக்கு ஒருபிரசங்கம் செய்தபோது "காங்கிரஸ் தொண்டர்கள் எல்லோரும் எங்கள் தொண்டர்கள். நீங்கள் எங்களை எப்படி நடத்துகிறீர்களோ அவ்வாறே அவர்களையும் நடத்தவேண்டும்" என்று சொன்னேன். அதனை ரிப்போர்ட் செய்தவர் "போலீசாரெல்லாம் காங்கிரஸ் தொண்டர்கள்" என்று நான் சொன்னதாக எழுதிவிட்டார். இதற்காக பிற்பாடு நான் ஒரு தனிச் செய்தி விடுக்கவேண்டியதாகி விட்டது.

### மூவர்ணக் கொடி

நமக்கு மட்டிலும் சொந்தமல்ல. தேசத்திற்கே சொந்தம். நாம் எவ்வாறு தேர்தலில் வெற்றிபெற்றோமோ அதேமாதிரி கொடியைக் காப்பாற்றுவதிலும் வெற்றிபெறவேண்டும். தேசியக் கொடி காங்கிரசுக்கு மட்டிலும் சொந்தமென்று நினைப்பது தவறு. எல்லோருக்கும் அது சொந்தம். தேர்தலில் எதிர்கட்சியார் கூட தேசியக் கொடியை உபயோகித்துக் கொண்டார்கள். அதனை நாம் ஆக்ஷேபிக்க முடியாது.

### காங்கிரஸ் மந்திரிகள்

என்னென்னமோ செய்ய நினைக்கிறார்கள். அவர்கட்கு நீங்கள் வெளியேயிருந்து பலம் தேடிக் கொடுக்க வேண்டும்; அவர்கள் உங்கட்குத் திராட்சைப் பழக்கூடை பொன்றை தரலாம். அதனை வாங்குவதற்குப் பதிலாக ஏன் பம்பிளிமாஸைத் தரவில்லை, ஏன் வாழைப் பழத்தைக் கொண்டு வரவில்லை, ஏன் ஆரஞ்சுப் பழத்தை வழங்கவில்லை என்று கேட்கலாகாது. திராக்ஷையின் மீது எல்லா பழங்களையும் அடுக்கி வைப்பதானால் திராக்ஷைப் பழம் நசுங்கி ஒன்றுக்கு முதவாமல் போய்விடும்.

### இன்றைய நிலைமையில்

பிரசாரம் செய்வதற்கு சில விஷயங்களைத் தான் வைத்துக்கொள்ளலாம். அவற்றினால் காங்கிரஸ் மந்திரிகட்கு பயனேற்படவேண்டும். ஆகவே எந்தெந்தக் காரியங்கள் பிரசாரத்திற்குரியவை என்று நீங்களே முடிவு செய்து கொள்ள வேண்டுவது கடன்.

# 1937-38 வருஷ சென்னை காங்கிரஸ் சர்க்கார் பட்ஜெட்

நிலவரி வஜா—கடன் நிவாரணம்—குடித் தண்ணீர் வசதி—

கைராட்டை ஆதரவு—சம்பள வெட்டு

ஏப்ரல் 1உ யன்று புது அரசியல் அங்குரார்ப்பணம் செய்யப்பட்டது. அதுமுதல் 3½ மாதகாலம் வரையிலும் இடைக்கால மந்திரிகளின் கையில் சர்க்காரின் நிர்வாகம் இருந்து வந்தது. ஜுலை 14உ தான் காங்கிரஸ் மந்திரிகள் பொறுப்பு ஏற்றார்கள். ஆதலால் கவர்மெண்டு நடக்க அத்யாவசியமான செலவினங்கட்காக 6 மாதத்துக்கு அதிகப்படாத காலத்திற்குரிய செலவுத் திட்டத்தை அமைத்துக் கொள்ளும் அதிகாரம் கவர்னருக்கு உண்டு. அதன்படி ஏற்பட்ட ஆறுமாதச் செலவும் இப் புதிய திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. எதிரிகளுங்கூட மெச்சத்தக்கவாறு பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருக்கிறது. மாகாணத்தின் கடன் ஒரு வருஷ சாதாரண வருமானத்தைவிடக் குறைவு. அதனால் மாகாணக் கடன் நிலைமையும் சீராகவே யிருக்கிறது எனலாம்.

இவ்வருஷத்தின் (1937-38)வருமானம் (ஆயிரத்தில்) ரூ. 159373 செலவு ரூ.159367 எனவே மிச்சம் 6 ஆயிரம். செலவினங்களில் கவனிக்கத்தக்க பல முக்கிய அம்சங்களிருக்கின்றனர். மாகாண நிர்வாகச் செலவினங்களில் நூற்றில் 6 பங்கு சர்க்கார் காரியாலயங்களை நடத்துவதற்குச் செலவாகின்றது. நூற்றில் 92 பங்குக்கு மேல் அபிவிருத்தி சாதனங்கட்கே செலவழிக்கப்படுகின்றன. இதனால் பொதுமக்கட்கு நன்மை உண்டாகுமென்று தெரிகிறதல்லவா!

### கிராம நிர்மாண வேலைகள்

சேலத்தில் அடுத்த அக்டோபர் முதல் மதுவிலக்கு அமலுக்குக் கொண்டு வரப்படுகிறது. இதனால் சர்க்கார் வருமானத்தில் ரூ 13. லட்சம் குறையும். தவிர இத்திட்டத்தின்படி நிலவரியில் ரூ 15 லட்சம் வரை வஜா செய்யப்படும். இதனால் மட்டும் விவசாயிகள் துயரம் நீங்கி விடாதாகையால் வேறு அடிப்படையான முறைகளும் கையாள வேண்டி வரும் என்று பிரதம மந்திரி குறிப்பிடுகிறார். தவிர கடனைத் தவிர்க்க வழியில்லாமல் கதியற்று விழிக்கும் விவசாயிகளைக் காப்பாற்ற 30 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. செலவினங்களில் அபிவிருத்தி அம்சங்களுக்குச் சென்ற வருடத்தைவிட அதிகப்பணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது நீர்பாசனத்திற்கு 5½ லட்சமும், கல்விக்கு 2½ லட்சமும், வைத்தியத்திற்கு 4½ லட்சமும், பொது சுகாதாரத்திற்கு 9½ லட்சமும், விவசாயத்திற்கு 1¾ லட்சமும், கூட்டுறவுக் கடன்களுக்கு 2¼ லட்சமும், கைத்தொழில்களுக்கு 5 லட்சமும் அதிகப்படியாய் கொடுபட்டிருக்கின்றன,

### கைராட்டை

நூல் நூற்கும் தொழிலுக்கு உதவியாக 2 லட்ச ரூபாய் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. இதை எப்படி கொடுப்பதென்ற விஷயம் ஆலோசனையில் இருந்து வருகிறது. கைத்தறித் துணிகளை விற்கும் கடைகளைத் தவிர இதர ஜவுளிக் கடைகளுக்கு ஒரு சிறிய லைசென்ஸ் வரி விதிக்கும் யோசனை இருந்து வருகிறது.

### தண்ணீர் வசதி

நம் மாகாண மக்களில் 92 சதவிகிதம் முனிசிபாலிடிகளுக்கு வெளியே வசிக்கிறார்கள். சென்னை மாகாணத்தில் 50,000 கிராமங்களும் 80 லட்சம் குடும்பங்களும் இருக்கின்றன. அந்தந்த இடங்கட்குத் தக்கபடி குடித்தண்ணீர் வசதிசெய்து கொடுக்கப்படும். குளங்கள் வெட்டி அவைகளைச் சுற்றிக் குழாய்கள் அமைக்கும் பிளானும் கையாளப்படும். இதற்கென ஒரு தனி பண்டு ஒதுக்கப்படும்.

### சம்பள வெட்டு

உத்தியோகஸ்தர்களது சம்பளங்களைக் குறைக்கப் போவதாய்த் திட்டத்தில் காண்கிறது. நூற்றுக்கு 2½யிலிருந்து 3. வரை கிரமமாகக் குறைக்கப்படுமென்று சொல்லப்படுகிறது. பொது மக்களுக்கும் கொழுத்த சம்பளம் பெற்ற உத்தியோகஸ்தர்களுக்கு மிடையே நிலவும் பெரிய வித்தியாசத்தை ஒழிக்கும் மனப்பான்மையைத் தெளிவு படுத்தலேயே இச்சம்பள வெட்டு காண்பிக்கிறது. இதனால் ஏராளமான பணம் மிச்சமாகாதென்பது தெரிந்த விஷயமே. மந்திரிகள் அதிகாரத்திற்கு உட்படாத உயர்ந்த உத்தியோகஸ்தர்களது சம்பளங்களைக் குறைப்பதற்கு இந்தியா மந்திரியிடம் முறையிட்டுக் கொள்ளப் போவதாய் பிரதம மந்திரி தெரிவித்திருக்கிறார்.

அடுத்த வருஷத்தில் கல்வி, சாக்கடைச் செலவுகள் முதலியன அதிகமாக்கப்படும் என்றும் ரயில்வே வருமானம் உயர்ந்து வருவதால் வருமானவரி அதிகமாய்க் கிடைக்குமென்றும் மந்திரியார் உறுதி கூறுகிறார். தவிர ஏழைகளின் சுமையை அதிகப்படுத்தாமல் புதிய வருமானங்கட்கு வழி தேடவும் சாத்தியமான வழிகளில் நிர்வாகச் செலவுகளைக் குறைக்கவும் காங்கிரஸ் சர்க்கார் பாடுபடும்.

இன்னும் 6 மாத காலத்தில் 1938-39 பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும். அப்போது காங்கிரஸ் ஆட்சிமுறையின் சிறந்த பலன்களை பொதுமக்கட்கு எடுத்துக்காட்டும் நன்னம்பிக்கைத் தமக்கிருப்பதாய் பிரதம மந்திரியார் தெரிவித்திருக்கிறார்.

### இந்நாள்

காங்கிரஸ் மந்திரிகள் பல காரியங்களை இலகுவாக முடித்துவிடுகிறார்கள். உதாரணமாகக் 'ஸ்ட்ரைக்கை' எடுத்துக் கொண்டால் வெகு சுலபத்தில் காங்கிரஸ் மந்திரிகள் நிறுத்திவிடுகிறார்கள். அவர்கள் சொல்லை முதலாளிகளும், தொழிலாளிகளும் கேட்கிறார்கள். முன்னால் எந்த 144-க்கும் பணியாத வேலை நிறுத்தம் இப்போது காங்கிரஸ் மந்திரிகள் தலையிட்டதுமே நின்றுவிடுகிறது.

### காரணம்

அன்பினால் ஆளலாமே யன்றி பலாத்காரத்தால் ஆளமுடியாது என்பதே. காங்கிரஸ் இதனை நன்றாக நிரூபித்துக் காண்பிக்கிறது. இந்நிரூபணத்தை இன்னும் அபிவிருத்தி செய்ய முயலவேண்டும்,

---



### தேம்ஸ் நதியில் வர்த்தகப் பெருக்கம்

**தினசரி 133 கப்பல்கள் நடமாட்டம்**

தேம்ஸ் ஆற்றில் உலகில் எவ்வளவுதான் வர்த்தக மந்தம் ஏற்பட்ட போதிலும், வர்த்தகக் கப்பல்கள் போக்கு வரத்து குறைவதில்லை. எப்போதும் கப்பல்கள் போய் வந்து கொண்டுதா மிருக்கின்றன. ஒரே நாளில் அவ்வாற்றில் 16 தேசங்களைச் சேர்ந்த 133 கப்பல்கள் நடமாடுகின்றனவாம். இவற்றுள் பிரிட்டிஷ் கப்பல்கள் மட்டும் 72-ஆம். பின்லந்து கப்பல்கள் 18; ஸ்வீடன் கப்பல்கள் 16. இதரவை, இதர 13 தேசங்களைச் சேர்ந்தவை.

### மாங்கொம்பில் காங்கிரஸ் பிரசாரம்

4-9-37உ இவ்வூரில் கிராம காங்கிரஸ் சபையின் சார்பில் ஓர் காங்கிரஸ் பொதுக்கூட்டம் திரு சி. பொன்னய்யா பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் சிறுகூடல்பட்டி திரு. செ. பழ. அள. குப்பான் அவர்களும் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி பிரசாரகர் திருப்பத்தூர் கே. கிட்டுவய்யா அவர்களும் காங்கிரசும் நமது கடமையும் என்பது பற்றி நீண்ட நேரம் வரை விரிவுரை நிகழ்த்தினார்கள். பின்னர் காரியதரிசி அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்று இரவு 9-30 மணிக்கு வந்தேமாதர கோஷத்துடன் இனிது நிறைவேறியது.

# சிறு நறுக்குகள்

—"அண்ணு"—

ராஜதந்திரமா இழிநிலையா?

—தலைப்பு

இரண்டுமில்லை; இன்னும் கொஞ்சம் உயிர் தொக்கிக் கொண்டிருக்கிறதல்லவா? அதனுல் புலம்பும் புலப்பம்.

* * *

சைனுவில் பொதுவுடமை,

—தலைப்பு

ஆண்டவனே! தமிழை இப்படிக் கொலை செய்யும் நீயா இந்தி கொலைசெய்து விடப் போகிறதென்று கூச்சல் போடுகிறாய்!

* * *

சில சமயம் பல்லாலே கடிச்சிடும்.

—கதை

நல்ல வேளை! மற்ற அங்கங்களால் கடியாம விருந்ததே!

* * *

ஜி. போ. தலைவருக்கு மோட்டார்!

—தலைப்பு

சீ! போ! ஓயாமல் இதுதானு உனக்கு வேலை.

* * *

சமஷ்டி நெருங்கிவிட்டது!

—பத்திரிகைச் செய்தி

புதை குழியையா நெருங்கிவிட்டது?

* * *

தவறு செய்யாமல் எம்மனிதனும் இருக்க முடியாது.

—செய்தி

இந்தப் பாடத்தை நிமிஷந்தோறும் திருப்பித் திருப்பி ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் ஜெஸ்டிஸ் கட்சி பத்திரிகைகள் மீது எரிச்சல் கொள்ளவே இடமேற்படாது.

* * *

ஜெர்மன் ரயில் பாதையின் நீளம் 42,756 மைல்.

—செய்தி

இவ்வளவு நீளமான ரயிலிருந்தும் ஹிட்லரை ஏற்றி வெளியே அனுப்ப முடியவில்லை.

* * *

ஒரு திமிங்கலத்தின் தோல் எவ்வளவு தடிமனுயிருக்கும்?

—கேள்வி

தடிமன் பருமனுக்குத் தம்பி போனும்.

* * *

பாவத்துக் காளாகிறவன் மனிதன்.

—தத்துவ போதம்

ஏன் மனிதனென்பதற்குப் பதில் காங்கிரசை எதிர்ப்பவன் என்னலாகாது?

### சென்னை மாகாணத்தில் பிளேக்

போடிநாயக்கனூரில் பிளேக் ஆரம்பித்திருப்பதாகவும் அதனுல் 21 பேர் இறந்து விட்டதாகவும் தெரிகிறது. முக்கியமாய் ஏழைகளும் ஹரிஜனர்களுமிருக்கு மிடங்களிலேயே இந்நோய் பரவி வருகிறதாம். பிளேக் இன்ஸ்பெக்டரும் முனிஸிபல் சுகாதார ஆபீஸரும் நிலைமையை கவனித்து வருகிறார்களாம்.

### ஹிந்திக்கு ரூ. 75,000

கான்பூரில் ஒரு மில் சொந்தக்காரரான லாலா பாலன்புந் ஸிங்கானியா ஹிந்தி பேசப்படாத மாகாணங்களில் ஹிந்திப் பிரசாரம் செய்வதற்காக ரூ. 75,000 நன்கொடை யளித்திருக்கிறார்,

தென்ராமனாதபுரம் ஜில்லா போர்டின் தலைமை ஆபீஸ் மதுரையில்தான் இருக்கும் என்று சென்னை சர்க்கார் உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

# விலைவாசிகள்

## வட்டி விகிதம்

**ரேங்கூன் நடப்பு வட்டி**

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி ரூ. | 0 | 4 | 0 |
| „ வைகாசி „ | 0 | 4 | 0 |
| „ ஆனி „ ரூ. | 0 | 4 | 0 |
| „ ஆடி „ ரூ. | 0 | 4 | 0 |

**மதராஸ் நடப்பு வட்டி**

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி ரூ. | 0 | 7 | 0 |
| „ வைகாசி „ ரூ. | 0 | 6 | 6 |
| „ ஆனி „ ரூ. | 0 | 6 | 6 |
| „ ஆடி „ ரூ. | 0 | 6 | 3 |

**செய்கோன்**

7—8—37

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர ஆடிமீ நடப்பு வட்டி, | 0 | 4 | 0 |
| „ „ தவணை வட்டி | 0 | 4 | 0 |

நெல் விலை பீக்கல் 1-க்கு 3$75லிருந்து 3$80 வரை.

உண்டியல் விலை இந்தியாவுக்கு செய்கோன் ரிங்கி 100-க்கு ரூபா. 98-3/4.

சிங்கப்பூருக்கு.......
செய்கோன் ரிங்கி 100க்கு
சிங்கை ரிங்கி 63 5/8.

**பினங்கு**

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வரவைகாசி நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| „ „ தவணை வட்டி 1உ | 0 | 3 | 6 |
| „ „ தவணை „ 16உ | 0 | 3 | 6 |

**சிங்கப்பூர்**

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர ஆடி நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| „ „ 1உ தவணை „ | 0 | 3 | 6 |
| „ ஆடி 16உ „ | 0 | 3 | 6 |

## தங்கம், வெள்ளி

சென்னை, செப். 7உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 34 | 9 | 9 |
| ஷை வாய்தா | 34 | 11 | 0 |
| மூனா தோலா 1-க்கு | 34 | 3 | 9 |
| சவரன் மொத்தம் | 22 | 3 | 9 |
| சவரன் சில்லரை | 22 | 4 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 51 | 5 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 6 |

**வட்டி**

ரிசர்வ் பாங்க் வட்டி:—3 பெர்செண்டு
இங்கிலாந்து பாங்க் வட்டி:—2 பெர்[செண்டு

**ரப்பர்**

லண்டன், செப். 6உ

புகைபோட்ட ரப்பர்
„ வாங்குபவர் விலை 8 15/16 பென்ஸ்
„ விற்பவர் „ 8 1/16 „

**சிங்கப்பூர் மார்க்கெட்**

ஆகஸ்டு, 14, சிங்கப்பூர்.

| | |
|---|---|
| ரப்பர் ராத்தல் 1-க்கு செண்டு | 29 7/8 |
| சயம் பீக்கல் „ ரிங்கி | 130-50 |
| சவரன் | 14-45 |
| வெள்ளிக்கட்டி | 19 15/16 |
| கொப்ரா (உலர்ந்தது) | 5-55 |
| கொப்ரா (கலவை) | 5-25 |

## கப்பல்

**சென்னையிலிருந்து ரங்கூன்**

எத்தோபியா:—செப். 13-ந் தேதி வந்து 17-ந் தேதி புறப்படும்.

எரின்புரா:- செப். 20-ந் தேதி வந்து 24-ந் தேதி புறப்படும்.

**மலாயா—சென்னை**

ரோணு:—செப். 18-ந் தேதி வந்து 21-ந் தேதி புறப்படும்.

ரஜூலா:—அக். 2-ந் தேதி வந்து 5-ந் தேதி புறப்படும்.

**நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்கு**

| | |
|---|---|
| ரஜூலா | 11—9—37 |
| ரோணு | 25—9—37 |

**மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு**

| | |
|---|---|
| ரோணு | 16—9—37 |
| ரஜூலா | 30—9—37 |

**மதராசிலிருந்து சிங்கப்பூர் செய்கோனுக்கு புறப்படும் கப்பல்கள்**

(வி. கே. அய்யர் அறிவிக்கிறார்)

| | |
|---|---|
| லெகாந்தெலீல் | 28—9—37 |



# நவீன காக்கச்சேரிகள்

—உமாபதி—

மலையாள தேசம் முழுவதும் அவர்—ஆம் அவர் பெயர் காக்கசேரி நம்பூதிரிப்பாடு என்று நினைக்கிறேன்—பெரும் புகழைப் பரப்பி ஒப்பாரு மிக்காருமற்ற ஒண் புலவராயிருக்கிறார். அவர் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மற்ற வித்வான்கள் நடுநடுங்குகின்றனர்.

இதனைக் கேள்விப்பட்டார் வித்யாரண்யஸ்வாமி என்னும் சிருங்கேரி (?) மடஸ்தாபகர். அவருக்குப் பொறுக்க முடியவில்லை. உடனே நேராகப் புறப்பட்டார் மலையாளத்திற்கு வழியில் ஆங்காங்குள்ள வித்வான்களையெல்லாம் வென்றுவிட்டு கடைசியில் காக்கசேரியை நாடினர். இருவரும் ஒரு நாள் போட்டியிடுவதென்று ஒரு பெரிய மண்டபத்தில் கூடினர். ஏராளமான வித்வான்களும் அறாபிகளும் கூடினார்கள். போட்டியாளரிருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவராக இரு ஆசனங்களிலமர்ந்தனர். ஒவ்வொரு கேள்வியாகப் போடப்பட்டன. எல்லாவற்றையும் எதிரி மறுத்து நியாயம் கூறினார். அவர்களுடைய ஒப்பந்தமே அதுதான். ஒருவர் என்ன சொன்னாலும் நியாயமோ அநியாயமோ— மற்றவர் அதனை மறுத்துச் சொல்லவேண்டும்.

இந்த ஒப்பந்தப்படி வித்யாரண்யஸ்வாமி சொன்ன சகல விஷயங்களையும் மறுத்துவிட்டார் காக்கசேரி நம்பூதிரி. இதைக்கண்ட வித்யாரண்யர் பெரிதும் குழம்பிச் சற்று நேரம் யோசித்தார்.

"என்ன, என்ன நல்ல காரியத்தைச் சொன்னாலும் இந்தப் படுபாவி மறுத்து விடுகிறானே; இனி என்ன தான் சொல்வது!"

என்று வருந்திவிட்டு வித்யாரண்யர் ஒரு தந்திரம் செய்தார். "நீ பதிவிரதை மகன்" என்றார் நின்று.

இதனைக் கேட்கவும் காக்கச்சேரி விழித்தார். தன் தாயை குறைகூற மனம் இடங்கொடுக்கவில்லை; என்றாலும் மறுத்தாக வேண்டுமே; ஆதலால், "இல்லை; நான் தேவடியாள் மகன்தான்" என்று மொழிந்து அதற்கான நியாயம் கூறத் தொடங்கினாராம்.

இவ்வாறு ஒரு கதை சொல்லப்படுவதுண்டு. இதுபோல் வாய்த்திருக்கிறார்கள் நம் தேசத்தில் ஒரு சாரார். இந்தப் பாழும் நாடு அடிமையாய் இத்தனை வருடமும் வாழ்ந்ததின் விளைவு போலும்;—இந்தப் பேர்வழிகள் சுதந்திர இயக்கமாகிய காங்கிரஸ் எதைச் சொன்னாலும் மறுத்துக் கொண்டே இருக்கிறார்கள். "இந்தியர்கள் எல்லாம் காட்டுமிராண்டிகள்" என்று சொன்னாள் ஒரு மேயோ. அதனைக் கண்டித்தனர் சில காங்கிரஸ் தலைவர்கள். உடனே மேற்படி காக்கசேரிகள் "மேயோ சொன்னது சரிதான்; நாம் காட்டுமிராண்டிகள்தாம்" என்றனர். காங்கிரஸ் கதர் கட்டவேண்டுமென்றது. "ஆகவே ஆகாது; கதர் சரியானதல்ல" என்றனர் காக்கசேரிகள். "ஜனநாயகம் நமது லக்ஷியம்" என்றது காங்கிரஸ். "இல்லை சமதர்மம் தான் நமது லக்ஷியம்" என்றனர் கா. நம்பூதிரிகள். பிற்பால் "சமதர்மமே நம் லக்ஷியம்"என்று கா. சோஷலிஸ்டுகள் கிளம்பியதும் "ஜஸ்டிஸ் கட்சி கொள்கையே நம் லக்ஷியம்" என்றார்கள் காக்கசேரிகள். சில தினங்கட்கு முன்பு ஸ்கௌட் இயக்கத் தலைவரான கிழவர், "இந்தியர்க்கு ஒழுக்கமே கிடையாது" என்று சொன்னதற்காக காங்கிரஸ்காரர்கள் எல்லாம் கண்டித்தார்கள். காக்கசேரிகளோ இன்று ஸ்கௌட் மகாநாடு கூட்டி அதில் குலாவுகிறார்கள். முன்னொரு காலத்தில் ஆதிதிராவிடர்கள் உயரவேண்டுமென்றார்கள் காக்கசேரிகள். (அதனை நெடுநாளாகக் கூறிக்கொண்டிருந்தார்கள்.) சில கால், "காந்தி ஹரிஜனர்கட்காக என்ன செய்திருக்கிறார்? ஒரு முறை பட்டினி யிருந்திருக்கிறார்; ஒரு முறை சிறை சென்றிருக்கிறார். அன்றி என்ன செய்திருக்கிறார்?" என்று வாய் கிழியக் கேட்டார்கள், அந்த வேளையில் மாக்டொனல்டு நல்லாயிருக்க! வகுப்புத் தீர்ப்பை வெளியிட்டார். காந்திஜீயால் பொறுக்க முடியவில்லை. உடன் இறக்கும்வரைப் பட்டினி யென்ற விரதம் கொண்டார். ஐந்து நாளையில் பரந்த இந்தியாவும் விரிந்த பிரிட்டனும் நடுநடுங்கிவிட்டன. பூனா ஒப்பந்தம் கைபெழுத்தாயிற்று. ஹரிஜன உத்தாரண இயக்கம் தோற்றிற்று. தேசம் பூராவும் காட்டுத் தீப்போல் அவ்வியக்கம் பரவியது. அப்போது காக்கசேரிகள் தம் ஆசை நிறைவேற மேற்படி தேசத் தீயோடு சேர்ந்து பாடுபட்டால் தம் லக்ஷியமும் நிறைவேறுமல்லவா? அதற்குப் பதிலாக அந்த சிரோமணிகள் "ஹரிஜனன் என்ற பட்டம் ஒரு சூழ்ச்சி" என்று இலக்கணம் பேசத் தொடங்கிவிட்டார்கள். அப்பேச்சு இன்றளவும் நிற்கவில்லை. ஒருகால் ஹரிஜன இயக்கம் ஒழிந்தால் அவர்கள் வாயலட்டலும் ஒழியுமோ என்னமோ!

இப்படியே எதுவானாலும் சரி, காங்கிரஸ்காரர்கள் சொல்வதற்கு எதிராக ஏதுவும் செய்ய அப்புண்ணியாத்மாக்கள் தயார். ஒருகால் காங்கிரஸ்காரர்கள் 'அனைவரும் வேஷ்டி கட்டித் தானாக வேண்டும்' என்று சொல்லத் தொடங்கினால், இக்காக்க சேரிகள் வேஷ்டியில்லாமல் நிர்வாண இயக்கத்தை தொடங்கி விட்டாலும் விடுவார்கள். அவ்வாறு செய்வதால் தம் செல்வாக்குக் குறைகிறதே, தம்மை எவரும் ஏறிட்டும் பார்க்கிறார்களில்லையே, முன்னுக்குப் பின் முரணல்லவா பேசுகிறோம் என்பதொன்றும் அவர்கட்குத் தோற்றுவதில்லை. 'காங்கிரசை எதிர்த்தோம்' என்ற ஒரு திருப்தி மட்டிலும் இருந்தால் போதும்!

அட்டா! இந்தப் புண்யாத்மாக்கள் ஜென்மம் இப்படியா பாழாய்ப் போக

வேண்டும்! ஒரு இயக்கத்தை எதிர்ப்பதற்கென்று உயிர் வாழவேண்டுமா? தமக்கு மலைபோன்ற கொள்கை யுண்டென்றால் அதனைக் கூறித் திரியலாகாதா?

* * *

இந்தக் காக்கசேரிகட்கு இப்போது ஹிந்தி கிடைத்திருக்கிறது. 'சொன்னதையே சொல்லிக்கொண்டிருந்தால் புளித்துப் போகுமல்லவா? அடிக்கடி விஷயமும் மாற வேண்டுவதுதானே; ஆகவே இப்போது இந்தியைப் பிடித்திருக்கிறோம்" என்கின்றார் ஒரு காக்கசேரி. நண்பரே! நிரம்ப நல்லது. வாயைப் பிளந்துகொண்டு 'தேமேன' உட்கார்ந்திரும். காங்கிரஸ்காரர்கள் ஏது வேனும் செய்தால் அதைப் பிடித்துக் கொள்ளும். இதைத் தவிர நீர் செய்யவேண்டியது எதுவு மில்லையல்லவா?

## மனிதன் வாயிலிருந்து காக்கைகள்

ஒரு நாள் காலை. வண்ணாரப் பேட்டையில் ஒரு மனிதன் பல் துலக்கிக்கொண்டிருந்தான். அவன் ஏழை போலும். 'டூத் பேஸ்டும்', 'பிரஷ்ஷும்' கிடைக்கவில்லை; கரிப் பொடியால் பல் துலக்கினன்.

அதனைக் கண்ட ஒரு நாகரிகர், முகத்தில் அருவருப்பை காண்பித்துக்கொண்டு "சிசி! கரி கரியாய்த் துப்புவதைப் பார்!" என்று கூறிய வண்ணம் வழி நடந்தார். அவர் வார்த்தையைக் கேட்ட ஒரு வழிப் போக்கன், "என்ன சார் அருவருப்பாகப் போகிறீர்களே!" என்றான். அதற்கு நாகரிகர், "கழுதை! கரி கரியாகத் துப்பிக்கொண்டிருக்கிறான்" என்றார்.

இவ்விருவர்களுடைய பேச்சையும் கவனித்துக்கொண்டு நடந்த மூன்றாவதொருவன் "கரி யென்கிறீர்களே, அருவருப்புக் கொள்ளத் தகுந்த அளவு கருப்பா?" என்றான். நாகரிகன், "காக்கைமாதிரி இருக்கிறது" என்று பதில் கூறினர்.

மேற்படி பேச்சின் கடைசி வாக்கியத்தைக்கேட்ட நாலவது பேர்வழியொருவன், "அப்படியா வாயிலிருந்து காக்கையா வருகிறது!" என்று தனக்குள் கேட்டுக்கொண்டான். அவன் வழி நடந்து ராயபுரத்தண்டை வந்ததும், எதிராக வந்த நண்பரிடம் "அண்ணா வண்ணாரப் பேட்டையில் ஒருவன் வாயிலிருந்து காக்காய் வருகிறதாம்" என்றான்.

அந்தப் பேர்வழி மிகவும் ஆச்சரியப்பட்டு, அடுத்தபடியாகக் கண்ட ஒரு சிநேகிதனிடம் தான் கேட்டதைக் கூறினன். அவன் "ஒரு காக்காய்தானா வந்தது?" என்றான்.

நண்பன்:—இல்லை பல காக்காய் வந்திருக்கலாம்.

என்றான். இப்படியாக கரியால் பல்துலக்கிய ஒருவனின் சமாசாரம் வண்ணாரப்பேட்டையிலிருந்து ராயபுரம் வருவதற்குள் காக்கை வாந்தியாகிவிட, ஜி. டி. பத்திரிகைகள் "மனிதன் வாயிலிருந்து காக்கைகள்—வண்ணாரப்பேட்டையில் வெளிப்பட்டன" என்று பிரசுரிக்கத் தொடங்கிவிட்டன.

* * *

என்று ஒரு கதை சொல்வார்கள். அதுபோலவிருக்கிறது சமீபத்தில் காமாவைப்பற்றி வெளிவந்த ஒரு செய்தி.

காமாவுக்கு 'திருவாங்கூர் அரசரால் வீர சிங்களப் பட்டம்" கொடுக்கப்பட்டதாம். வீர சிங்களப் பட்டம் கொடுக்கும்படியாக திருவாங்கூர் அரசருக்கு என்ன உரிமை! சிங்களம் என்பது இலங்கையல்லவா! இலங்கைக்கும் சித்திரைத் திருநாளுக்கும் என்ன உறவு? மேலும் காமாவுக்கு சிங்கள நாட்டு வீரன் என்ற பட்டம் கொடுக்கும்படியாக அவர் என்ன செய்துவிட்டார்?

உண்மை யென்னவென்றால் அது ஒரு கதை.

திருவாங்கூர் அரசர் காமாவின் பலத்தைப் பார்த்துவிட்டு 1000 ரூபாய் பரிசும் ஒரு தங்கச் சங்கிலியும் பரிசளித்தார். ராஜாக்கள் ஒருவனுடைய சாமர்த்தியத்தைப் பார்த்துக் கொடுக்கும் சங்கிலிக்கு 'வீரசங்கிலி' என்று பெயர். திருவாங்கூர் அரசர்கள் தொன்று தொட்டு எந்த நிபுணர்கட்கேனும் பரிசளித்தால் சங்கிலியே கொடுப்பது வழக்கம். அந்த சங்கிலியைத் தமிழில் வீர சங்கிலி என்று அழைப்பதுபோல் மலையாளத்தில் "வீரச்ருங்கலா" என்று பெயர் சொல்வது வழக்கம். இவ்வழக்கத்திற்கேற்ப திருவனந்தபுரம் அசோஸியேடட் நிருபர் "ராஜா காமாவுக்கு ஒரு "வீரச்ருங்கலா" கொடுத்தார் என்ற சென்னைப் பத்திரிகைகட்கு செய்தியனுப்பினர். தமிழ்ப் பத்திரிகைகளில் சிலவற்றிற்கு மலையாள சம்பிரதாயம் தெரியாததால், பொருள் விளங்காது அபாரமாக யோசித்துவிட்டு "வீர சிங்களப் பட்டம்" என்றாக்கிவிட்டன. அதனைப் படித்த ஒரு நண்பர் நேற்று என்னிடம் திருவாங்கூர் ராஜா புரொபசர் காமாவுக்கு "The hero of Ceylon" என்ற பட்டம் வழங்கினாராம் என்றார். என்ன வேடிக்கை! பல் விளக்கியது காக்கை வாந்தியானதுபோல், ஒரு தங்கச் சங்கிலி Hero of Ceylon என்று ஆகிவிட்டது!





# ஹிட்லர்-ஸ்டாலின் கூட்டுறவு சாத்தியமா?

## ருஷ்யாவின் எதிர்கால நிலைமை

### 'டெய்லி டெலிகிராப்' அபிப்பிராயம்


மிஸ்டர் ஹிட்லர்

ஐரோப்பாவிலுள்ள வல்லரசுகளின் மத்தியில் சோவியத் ருஷியாவின் நிலைமை என்ன என்பது பற்றி "டெய்லி டெலிகிராப்" எனும் ஆங்கிலப் பத்திரிகை ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியிருக்கிறது. தற்போது ஸ்டாலினின் சர்வாதிகார ஆட்சியின் பயனாக சர்வதேச அரசியலில் எவ்வித மாற்றங்கள் ஏற்படலாமென்று அப்பத்திரிகை டவிதமாய் யூகித்து எழுதுகிறது. அதன் சாரத்தை கீழே பார்க்க:—

ஸ்டாலின் செய்த காரியங்களில் மகத்தானவை இரண்டு. ஒன்று, அவர் நிர்மாணித்த பிரமாண்டமான ஆயுதத் தொழிற்சாலை. இதன் மூலமாக ருஷ்யாவின் செம்படைக்குப் போதுமான எல்லா யுத்தத் தளவாடங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. இரண்டாவது குறிப்பிடத்தக்கது செம்படையின் சக்திப் பெருக்கே யாகும். யுத்த காலத்தில் இதர நாடுகளைப்போல் ருஷ்யா தன் ஆள் வலிமையைக் கணக்கில்லாமல் இறைத்துக்கொண்டே யிருக்குமென்று எண்ணவேண்டாம். தற்போது போர் முனைக்கு சுமார் 12 அல்லது 15 லட்சம் போர் வீரர்களுக்குமேல் ருஷியாவால் அனுப்ப இயலாது. ரயில்வே முதலான போக்குவரத்துச் சாதனங்கள் இன்னும் போதுமானபடி அங்கே விருத்தியாகவில்லை. ஆனால் அடிப்படை மிக உறுதியாவே இடப்பட்டிருக்கிறது என்பதை மறந்துவிடலாகாது. யுத்த விமானங்களின் தொகை 4000. இவற்றுள் 800 விமானங்களின் சக்திக்கு இணையானவை இதர படைகளில் கிடையாவெனக் கூறலாம். மற்ற தேசங்களிற்கூட சைன்யங்கள் இவ்வளவு தூரம் யந்திர மயமாக்கப் பட்டிருக்கவில்லை. நிற்க,


தோழர் ஸ்டாலின்

சமீபத்தில் ருஷியாவில் சுமார் 94 அரசாங்க உத்தியோகஸ்தர்கள் —பெரும் பதவிகள் தாங்குபவர்— கொல்லப்பட்டார்கள். லெனினைச் சேர்ந்தவர்களும், பொது உடைமையை உலகப் புரட்சியாக்கிவிட வேண்டுமென நினைத்துக் கொண்டிருந்தவர்களு மானவர்களால் இவ் எதிர்ப்பு விளையவில்லை. அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற ஒரு கூட்டத்தார்களே அதற்குக் காரணம்.

ருஷியாவின் முக்கிய பிரச்னை என்னவென்பதை ஆராய்வோம். படைத் தலைவர்கள் பெருமையும், சக்தியும், சுதந்திரமும் பெற்று தற்கால அரசியலை எதிர்த்தால் ஸ்டாலின் அவ்வாறு செய்தாரா? அல்லது ருஷியத் தலைவர்கள் அயல் நாட்டினருடன் சமரசம் பேசும் சூழ்ச்சிகளைக் கண்டுபிடித்து அவர்களைத் தண்டிக்க உள்ளங் கொண்டாரா வென்பதையே ஆராயவேண்டும்.

இவ் விஷயத்தில் ஒன்றுபட்ட அபிப்பிராயம் அறிவதற்கில்லை. சோவியத் ருஷியாவின் யுத்தத்தலைவரான மார்ஷல் டுக்காசெவ்ஸ்கி சம்பந்தப்பட்ட ஒரு காரியத்தை ஆராய்வோம்.

ஸ்டாலின், பிரான்ஸோடு நேச உடன் படிக்கை செய்துகொள்ள வேண்டுமென்று சொன்னபோது, டுக்காசெவ்ஸ்கி அதற்கு இசையவில்லை. ஆனால் அவர் 15 வருடங்கட்கு முன் ஜெர்மானியருடன் ராபல்லோவில் செய்துகொண்ட ஒப்பந்தத்தை உயிப்பிக்க வேண்டும் என்றார். இந்த ஒரு எண்ணமே தற்போதுள்ள ருஷ்யாவில் அவரது நிலைமையைத் தவிடுபொடியாகப் புரட்டிவிடுமல்லவா! தவிர இரண்டு மூன்று வருடங்கட்கு முன்னர் எழுதப்பட்டிருந்த ஒரு புத்தகத்தில் டுக்கா

செவஸ்கி, ஸ்டாலினைக் கண்டித்து எழுதியிருந்தார். 1920-ல் போலாந்துப் பிரதேசத்தில் வைக்கப்பட்டிருந்த 14 குதிரைப் படைகளை எதிர்த்துப் போரிடவேண்டுமென்ற தீர்மானத்தை ஸ்டாலின் ஏற்றுக் கொள்ளாமலிருந்ததே அதற்குக் காரணம்.

ஸ்டாலின் என்றும் யுத்தத்திற்கு இடங் கொடுக்கலாகாதென்றே வேலை செய்துவருகிறார். ஆறு ஜி. பி. யூக்கள் என்னும் மெய்க்காவலாளர்கள் எப்பொழுதும் அவரைப் பாதுகாத்துக்கொண்டிருக்கிறார்கள். தற்போது அவர் கையாண்ட அடக்குமுறைச் சட்டங்கள் அவரது நிலைமையைப் பலப்படுத்துவனவாயிருந்தன. தமக்குச் சொந்தமான ஆட்களையே உயர்தர உத்தியோகஸ்தர்களாகவும், படைத்தலைவர்களாகவும் அமர்த்திக் கொண்டிருக்கிறார். பொதுவுடமைத் திட்டங்களால் பொது மக்கட்கு விதிக்கப்பட்டிருந்த தீவிரமான கட்டுப்பாடுகளை தற்போது ஸ்டாலின் தளர்த்தி வருகிறார். விசேஷ அரசியல் உரிமை பெற்றிருப்பவர்கள் பொது ஜன நன்மைக்கு விரோதமான வழியிற் திரும்பிவிடலாகாதென்ற நோக்கத்துடனேயே சென்ற ஆண்டில் ருஷியாவில் ஒரு புதிய அரசியல் சட்டத்தைப் புகுத்தினார்.

ஒருவேளை திடீரென யுத்தம் ஏற்பட்டு விடுமாயின் அரசியலில் அதிருப்தி கொண்டிருப்பவர்கள் உள்நாட்டில் குழப்பத்தை உண்டுபண்ணிவிடலாகாதென்ற நோக்கத்துடனேயே ஸ்டாலின் யுத்தத்திற்கு இடங்கொடாமல் எச்சரிக்கையுடனிருக்கிறார்.

1933-ல் ஜெர்மனியுடன் விரோதங் கொண்டார். பால்கனை இணைத்துக்கொள்ளும் விஷயமாய் துருக்கியைச்சார்ந்து பேசினார். இதுகாலையில் பிரஞ்சுக் குடியரசுக்கும் இவருக்குமுள்ள கூட்டுறவு துலங்கிற்று. ஐரோப்பாவின் மேற்புறமாயுள்ள இரு பெரிய தேசங்களும், ஜெர்மனியின் எழுச்சியை அடக்கிக் கொண்டிருக்குமெனின் ஸ்டாலினும் தமது அரசியல் போக்கை மாற்றிக்கொள்ள மாட்டார்.

ஆனால் பிரஞ்சு, ஆங்கில அரசாங்கங்கள் இரண்டாவது முறையும் லோகார்னோ உடன்படிக்கையைப் போன்று மீண்டும் ஜெர்மனியுடன் உறவாட ஆரம்பித்து விடுமாயின் ஜெர்மனிக்கு ஐரோப்பாவின் மத்திய பாகங்களிலும், கீழ்ப் பாகங்களிலும் செல்வாக்கு அதிகமாகிவிடும். எனவே ருஷ்யா இதைப் பார்த்துக்கொண்டு சும்மா விராது. ஸ்டாலின் தனது பாதுகாப்பின் பொருட்டு ஹிட்லருடன் ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டிவரும்.

சர்வதேச (கோமின்டார்ங்) கம்யூனிஸ்ட் கட்சியை ஒழித்துவிடும் வேலையில் ஸ்டாலின் இறங்கிவிடுவாரேயானல் ஹெர் ஹிட்லர் பெரும் வெற்றி யடைந்துவிட்டதாய் எண்ணிக்கொண்டு ஸ்டாலினுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள ஆரம்பித்து விடுவார்.

இதனுல் ஐரோப்பாவின் கிழக்கிலும், மத்திய பாகங்களிலும் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களும், இதர விளைவுகளும் ஜெர்மனியர் ஆதிக்கத்துக் குள்ளாகிவிடும். அப்போது கடல்களில் மீது ஆதிக்கஞ் செலுத்தும் மேற்குத் தேசங்கள் அடைவதைப்போன்ற அனுகூலங்களை ஹிட்லரும் ருஷியருடன் உடன்படிக்கை செய்துகொள்வதால் பெற்றுக்கொள்வார். தவிர இரண்டு போர் முனைகளிலும் போரிட வேண்டிய அவசியம் ஜெர்மனிக்கு ஏற்படாது. இதனுல் ஜெர்மன் சர்வாதிகாரத்தின் யுத்த ஏற்பாடுகள் புதிய சக்தியைப் பெற்றுவிடாதென்று யார்தான் நம்பமாட்டார்கள்?

1934-35-ல் பிரஞ்சு ராஜதந்திரிகள் பிரஞ்சு-சோவியத் உறவு ஏற்பட்டு, மேற்கூறிய விபரீத ஒப்பந்தங்கள் நேரிடாவண்ணம் முயன்று வந்தார்கள். பிரஞ்சு அரசாங்கம் தற்போது அத்தகைய கூட்டுறவைப் புறக்கணித்துக்கொள்ள முடியாது. பிரிட்டிஷ் அரசாங்கமும் எச்சரிகையுடனேயே இருக்கிறது. ஜெர்மனியுடன் செய்துகொண்ட லோகர்னோ சமாதான உடன்படிக்கையால் பிரிட்டிஷ் தனக்கிருக்கும் சமாதான உரிமையை விட்டுக் கொடுத்ததாகாது.

## 118 வயது தம்பதிகள்

திருவாங்கூர் அசெம்ப்ளியில் 25 வருடகாலமாய்ப் புலையர்களின் பிரதிநிதியாய் வீற்றிற்கும் புலைய மெம்பரான ஸ்ரீ அய்யன்காளி என்பவரின் தந்தைக்கு வயது 118 ஆகிறது. அவர் தாய்க்கு 1.1 ஆகிறது. இருவரும் இன்றும் திருவனந்தபுரத்திற்கடுத்த வெங்கானூர் கிராமத்தில் உயிருடனும் கண்பார்வை மங்காமலும் இருந்து வருகின்றனர்.





# ஹிந்தி யொழிப்பு நாடகம்

—(உ. ப.)—

"ஹிந்தி ஒழிப்பு நாடகம்! ஹிந்தி ஒழிப்பு நாடகம்!!"

"எங்கே! எங்கே?"

"சென்னை சௌந்தரிய மகாலில்."

"அழகான கொட்டகை.—நாடகம் எப்போது நடக்கப்போகிறது?"

"நடந்து முடிந்துவிட்டது!"

"அடடா! முடிந்துவிட்டதா! யார் அதில் அயன்பார்ட்."

"ஸ்ரீமான் எஸ். எஸ். பாரதியார்."
"ஸ்டேஜ் கண்டக்டர் யார்?"

"சென்னை இந்தியொழிப்புப் பிரசாரக் கமிட்டியார்."

"சீ! சீ! அது நாடகமேயல்ல! ஏதோ கூட்டம் போலிருக்கிறது. விளக்கமாக விஷயத்தைச் சொல், பார்ப்போம்."

"விஷயமா கேட்கிறாய்! கேள் :—
5ந் தேதியன்று அதாவது சென்ற ஞாயிற்றுக்கிழமை யன்று, சென்னை ஜில்லா அரசியல் மகாநாடு நடைபெற்றது காங்கிரஸ் மண்டபத்தில். அதே வேளையில் மாம்பலத்தில் ஆசிரியர்களின் மகாநாடு ஒன்று நிகழ்ந்தது. இதனுல் அநேகமாக எல்லா காங்கிரஸ்காரர்களும் ஆசிரியர்களும் மாணவர்களும் மாம்பலத்துக்கும் காங்கிரஸ்மண்டபத்திற்கும் போய்விட்டார்கள். எனவே டவுனுக்குள் ஜஸ்டிஸ்கட்சியார்கள் எதுவேனும் பேசினால் தட்டிக் கேட்க ஆளிருக்க வழியில்லை அல்லவா?"

"ஆம் ஆம்! உண்மை"

"அந்த வேளையைப் பார்த்து சௌந்தரிய மகாலில் ஆரம்பிக்கப் பெற்றது நாடகம். நாடகக் கொட்டகை வாயிலின் முன் தலைவிரி கோலமாக ஒரு பெண்ணின் உருவத்தை வைத்து தமிழ்மாதிரியாகக் காட்டினார்கள்.* அப்பால் உள்ளே சிலர் கூடிக்கொண்டு "காங்கிரசை தேசம் மதிக்கிறதே, உலகம் மதிக்கிறதே, எங்களால் பொறுக்க முடியவில்லையே!" என்று அழலானார்கள்."

"இதுதானு நாடகம்."

"இல்லை கேள். முதலில் அயன் பார்ட் அதாவது தலைவராக அமர்ந்த ஸ்ரீமான் எஸ். எஸ். பாரதி ஒப்பாரி ஆரம்பித்தார். ஒப்பாரியென்றால் அடடா! இரண்டுமணி நேரமா? கேட்போர்கள் வெறுத்து அலுத்துக் கைதட்ட ஆரம்பித்துவிட்டார்கள்; என்றாலும் விட்டாரில்லை. தலைமை வகிப்பவர் கூட்டத்தை நடத்தத்தான் வந்திருக்கிறார் என்பதை மறந்து ஒரே மூச்சாகப் பிடித்துவிட்டார். வேண்டுமானால் பிரசங்கிகள்—முடிந்த பிறகு முடிவுரையென்ற முறையில் அவர் எவ்வளவு வேண்டுமானாலும் பேசி கூட்டத்தைத் தூரத்தலாமல்லவா? அப்படி செய்தாரில்லை பாரதியார்! ஒருகால் முடிவுரை வரையிலும் ஒருவரும் பொறுமையாக இருக்கமாட்டார் என்று நினைத்தாரோ என்னமோ?"

"போகட்டும். கை தட்டியதைக் கேட்கவில்லையா?"

"கேட்டார். முகம் வெட்கமடைந்தது. ஆனாலும் பேசினார்.

"சரி அப்பால் யார் யார் பேசினார்கள்?"

"காரைக்குடி திருப்பத்தூரிலிருந்து வந்த முஸ்லிம் லீகர் என்று சொல்லிக்கொள்ளும் ஒரு சாகிபு; தஞ்சையிலிருந்து வந்த உமாமகேஸ்வரம் பிள்ளை யென்பவர்; காஞ்சீபுரம் வாசியான அண்ணாத்துரை யென்பவர்; திருச்சி வாசியாகிய கெ. எம். பாலசுப்ரமண்யம் என்பவர்—இத்தனை பேரும் பேசினார்கள்."

"அடடா! இவ்வளவு பெரிய சென்னை நகரில், இந்த ஹிந்தி எதிர்ப்பு பிரசாரக் கமிட்டிக்கு ஆள் கிடையாமலா போயிற்று? போகட்டும். ஈ.வே. இராமசாமியாரும், மறைமலை அடிகளும் வருவதாகச் செய்தி பரப்பப்பட்டதே; அவர்கள் ஏன் வரவில்லை?"

"அவர்கட்குத் தெரியும் இந்த எதிர்ப்பின் அந்தரங்கம். ஆதலால் புத்திசாலித்தனமாக ஒதுங்கிவிட்டார்கள்."

"போகட்டும். எப்படியாவது—அந்நிய ஊர்க்காரர்களாயினும் வந்து எதிர்த்துப் பேசினார்களல்லவா?"

"ஆமாம். பாராட்ட வேண்டியது தான்."

"அதென்ன? கேலி செய்கிறாயா?"

"இல்லை. இத்தனை பேரும் மாதங்கள் எத்தனை கடந்தாலும், வருடங்கள் எத்தனை போனாலும், மந்திரி சபைகள் எத்தனை மாறினாலும், அரசியல்கள் எத்தனை புகுந்தாலும் விடாது காங்கிரசை எதிர்த்துக் கொண்டிருக்கிறார்களல்லவா? ஆனால் ஒன்று திரு. கெ. எம். பாலசுப்ரமண்யம். காங்கிரஸ் எதிரியானாலும் ஒரு நிலையில் நிற்பவரல்ல. அதே மாதிரி தான் சாகிப் பக்தரியும்."

"ஏன் அவர்கள் என்ன செய்தார்கள்?"

"திரு. பாலசுப்ரமணியம் கொஞ்ச நாள் சு. ம. இயக்கத்திலிருந்தார். அப்பால் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்தார். அப்பால் ஜனநாயகத்தில் சேர்ந்தார். இப்போது எப்படியிருக்கிறாரோ?"

* சிந்தாமணியாக நடிக்கும் மிஸ். அஸ்வத்தம்மாவின் படம்.

"சாகிப் சங்கதியென்ன?"

"அவரும் கொஞ்சநாள் காங்கிரசி லிருந்தார். சுயமரியாதைக் காரர்களோடு அலைந்தார். இப்போது லீகில் சேர்ந்திருக்கிறாராம்"

"நல்லது. சாகிபுகட்கு இந்திப் பிரசாரத்தில் உள்ளூர சந்தோஷ மல்லவா?"

"இருந்தாலும் காங்கிரஸ் இந்தி வேண்டுமென்று சொல்லலாமா?

"உருது லிபி மந்திரியெனப் பெய ரெடுத்த கனம் கலிபுல்லா அவர்கள் காங்கிரஸ் உருது லிபியை ஏற்றுக் கொண்டால் எல்லா முஸ்லிம்களும் காங்கிரசில் சேர்ந்து விடுவார்கள் என்றாரே; அவர் முஸ்லிம் லீகர் தானே; அப்படியிருக்க இந்த ஜனாப் பக்தாதி ஏன் இந்தியை கண்டித்துப் பேசுகிறார்."

"முஸ்லிம் லீகின் லக்ஷணமோ அல்லது அதனைச் சேர்ந்திருப்பதா கச் சொல்பவர்கள் லக்ஷணமோ எதுவோ புலப்படுகிறது."

"சரி எப்படியோ. சௌந்தரிய மால் நாடகம் முடிந்துவிட்டது அல் லவா?

"ஆஹா முடிந்துவிட்டது"

"இதனால் இந்திப் பிரசாரத்திற்கு ஏவேனும் ஊனம் ஏற்படுமோ?"

"சீ! சீ! காங்கிரஸ் எதிரிகள் காங் கிரஸ் முடிபைக் கண்டிப்பது ஒரு பிர மாதமா!"

## அந்தமான் கைதிகள்

இந்திய சட்டசபையில் திரு. எஸ். சத்தியமூர்த்தியின் கேள்விக்கு உள் நாட்டு மெம்பர், பயங்கர இயக்கக் கைதிகளை நாட்டிற்குள் கொண்டு வருவதற்கு சில மாகாண சர்க்கார் கள் இசைந்து கொண்டிருப்பதை இந்திய சர்க்கார் ஆலோசித்து வரு வதாகக் கூறினார்.

---

திருவாங்கூர் சமஸ்தானக் காங் கிரஸ் கமிட்டியார் பிரசார வேலை யைத் தொடங்கிவிட்டார்கள். இம் மாதிரியே எல்லா சமஸ்தானங்களும் செய்யப்புகின் சமஷ்டி வருவது கனவாகும். திருவாங்கூரைப் பிற சமஸ்தானங்கள் பின்பற்றுமாக.

## வரதட்சணையால் விளைந்த விபத்து

ஓர் இளம்பெண்ணை ஜான்ஸியி லுள்ள ஒரு மாணவனுக்கு கலி யாணஞ் செய்துகொடுப்பதாய் இரு தரப்பிலுள்ளவர்களும் நிச்சய தாம் பூலம் செய்துகொண்டார்கள். மணப் பெண்ணின் சகோதரனே குடும்பத் தைக் காப்பாற்றி வந்தான். பிள்ளை வீட்டார் சில நாட்களுக்குப் பின்னர் பெருந் தொகைகளை வரதட்சணை யாகக் கொடுக்கவேண்டுமென வற் புறுத்தினர். பெண்ணின் சகோதரன் ஏழையானதால் கேட்ட தொகை அளிக்க முடியவில்லை. எனவே விவாக உடன்படிக்கை ரத்தாகிவிட்டது. இத னால் உள்ளமுடைந்துபோன அப் பெண் வரதட்சணை வாங்கும் கொடிய முறையைக் கண்டித்து ஒரு நீண்ட கடிதம் எழுதி வைத்துவிட்டுத் தனது ஆடையில் நெருப்பை மூட்டிக்கொண் டாள். தான் இறந்து போவதால் தனது குடும்பத்தின் நற்பெயர் காப் பாற்றப்படும் என்று அக்கடிதத்தில் எழுதியிருந்தாள்.





## "நான் ஒரு சோஷலிஸ்ட்"

### அபேதவாதத்தைக் கண்டு ஏன் அஞ்சவேண்டும்?

வேலூரில் தொழில் மந்திரியார் சொற்பொழிவு

செப். 5-ந் தேதி இரவு வேலூர் காந்தி மைதானத்தில் ஓர் பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் 5000 மக்களுக்குமேல் கூடி யிருந்தனர். அப்போது தொழில் மந்திரி கனம் வி. வி. கிரி பேசிய தாவது:—

"நான் மதுரையில் பேசியதையே இங்கும் குறிப்பிட விரும்புகிறேன். 'சோஷலிஸம்' என்பது ஒரு அரக் கனோ, சிங்கமோ, புலியோ அல்ல. நான் ஒரு அபேதவாதி (சோஷ லிஸ்ட்) என்பதைப் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஓர் அபேதவாதி வேண்டாமென்றால் நான் இன்று மந்திரி சபையில் அங்கம் பெற்றேயிருக்க மாட்டேன். (கரகோஷம்) கராச்சிக் காங்கிரஸ் தீர்மானங்களைச் செயல் முறைக்குக் கொண்டுவர விரும்புபவர் அனைவரும் அபேதவாதிகள் அல்லது அபேதவாதத்துக்கு வந்து கொண் டிருப்பவர்களென்றே சொல்லவேண் டும். ஆகலால் அபேதவாதம் என் றால் ஒருவரும் அஞ்சவேண்டியதில்லை. சோஷலிஸம் என்றால் சிலர் பயப்படு கிறார்கள். இதனால் அவர்கட்கு சோஷலிஸத்தின் அடிப்படையான கொள்கைகளைப்பற்றித் தெரியாதென் றே புலப்படுகிறது. நம்மில் ஒவ்வொரு வரும் பொருளாதாரமான சுய ஆட்சியைப் பெற்றுவிட்டோமாகில் நாம் பணக்காரர் ஆகவேண்டு மென்ற கவலை ஏன் உண்டாகப் போகிறது? அப்போது நாட்டில் பல திருடர்கள் இருக்கமாட்டார் கள். கணக்கற்ற சிறைச்சாலைகளும் சிறை மந்திரிகளும் தேவைப்பட மாட்டார்கள். தமது குழந்தை களும், பந்துக்களும் நிராதரவாய் நிற்கக்கூடா தென்ற உத்தேசத்துட னேயே ஒவ்வொருவனும் பணத்தை திரட்டுகிறான். நான் கூறிய பாது காப்பை ஒரு தேசம் (State) அளிக்குமாயின் நூற்றுக்கு 90 பேர் தமது உடைமைகளை எடுபாடின்றியே ஒப்புவித்து விடுவார்கள்.

கலப்பில்லாத அரசியல், பொரு ளாதார விடுதலைக்காகவே போராடிக் கொண்டிருக்கிறோம். தற்போது சிறை செல்ல வேண்டியதில்லை. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு குடும்ப மும் காங்கிரசுக்கு ஒரு மெம்பர் அளிக்குமாயின் காங்கிரசுக்கு எழு கோடி அங்கத்தினர்கள் திரண்டு விடுவார்கள். சுயராஜ்யமும் உடனே கிடைத்துவிடும்.

சென்னைக் காங்கிரஸ் சர்க்காரின் சார்பில் நாங்கள் உங்களுக்காகவே உழைத்துவருவதாக உறுதி கூறு கிறேன். தேசத்தின் நன்மைக்காக நாங்கள் எத்தகைய தியாகத்தையும் செய்யத் தயாராக இருக்கிறோம் (கர கோஷம்) உங்களது கட்டளைப்படி சட்டசபைக்குள் புகுந்தோம், உங்க ளது ஆணையின்படி வெளியே வேண்டு மாகிலும் வந்துவிடுவோம். நாம் கேட்டமாத்திரத்திலேயே சுயராஜ் யம் கைகூடும். ஆனால் அதனை சக்தி பூர்வமாய்க் கேட்கவேண்டும்.

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

கண்டு தம் குறைகளை நிவிர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். திரு. வர்க்கி ஆசிரியர்களின் வாதத்தைக் கேட்டுவிட்டு அடியில் வரும் பதிலைக் கூறினர் :—

'சர்க்காருக்கு போர்டு பாடசாலைகளிலும், உதவிபெறும் பாடசாலைகளிலும் வேலைபார்க்கும் ஆரம்ப ஆசிரியர்களின் கஷ்டம் நன்றாகத் தெரியும். அதனைப் போக்கத் தகுந்த முறைகளைக் காணுமாறு தீவிர முயற்சிசெய்து வருகிறார்கள்.. ஆசிரியர்களின் எல்லாக் குறைகளையும் ஒரேயடியில் ஒழித்துவிட முடியாது. மாகாணத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் 5வது வகுப்பு வரையிலுள்ள ஒரு பாடசாலையை நடத்த வேண்டுமென்பது சர்க்காரின் யோசனை. இந்த யோசனைகளெல்லாம் நிறைவேறும் வரை சற்று பொறுத்திருங்கள்.'

திரு. வர்க்கியின் சொல் ஒருவாறு ஆறுதலளிக்கிறதென்றாலும் ஆரம்ப ஆசிரியர் குறை நாள்பட்டது என்பதை உலகறியும். அதனை எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரத்தில் தீர்த்து வைக்கிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு நலம் என்று கூறுவோம்.

---

## உலகின் ரயில்வேக்கள்

ஜெர்மன் ரயில் பாதையின் நீளம் 42,756 மைல்.

* * *

பிரெஞ்சு ரயில்பாதை 40,153 மைல் நீளமிருக்கிறது.

* * *

கிரேட் பிரிட்டனில் போடப்பட்டுள்ள ரயில் பாதையின் நீளம் 23,383 மைல்.

* * *

ருஷ்யாவில் 50,691 மைல் தூரம் ரயில் பாதை நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது.

* * *

இந்தியாவில் மொத்தம் 42,000 மைல் நீளம் ரயில் பாதை போடப்பட்டிருக்கிறது.

## சில துணுக்குகள்

சர்க்கார் சிப்பந்திகள் கதர் யூனிபாரம் அணியவேண்டுமென்று ஒரிசா சட்டசபை தீர்மானித்திருக்கிறது.

* * *

பரமக்குடி பஞ்சாயத்து போர்டில் நடைபெற்ற தேர்தலில் எல்லா ஸ்தானங்களையும் காங்கிரஸ் கைப்பற்றி விட்டது.

* * *

அந்தமான் கைதிகளை வங்காளத்திற்கு கொண்டு வருவது பற்றி முதன் மந்திரி ஹக்கிற்கும் காந்திஜீக்கும் தந்திப் போக்குவரத்து நடைபெற்று கொண்டிருக்கிறதாம்.

* * *

சென்னையிலுள்ள டெலபோன்களின் சார்ஜை மாதம் 10 ரூபாயிலிருந்து 9 ரூபாயாகக் குறைத்திருக்கிறார்கள். கனக்ஷன் சார்ஜ 20-லிருந்து 15 ஆக்கப்பட்டிருக்கிறது.

* * *

ஜெர்மனி அதன் பெரிய யுத்தக் கப்பல்களை வெளியிடப்போகிறதாம். அவற்றை ஜெர்மன் மக்கள் நீங்கும் வரவேற்கவேண்டு மென யுத்த மந்திரி கோயரிங் வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

* * *

பண்டித ஜவஹர் பாலஸ்தீனத் தலைவர்கட்கு ஒரு நேச அறிக்கை விட்டு 'யூதர்களும் அராபியர்களும் ஒன்று சேர்ந்து பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைவிட்டு மீள வேண்டும்' எனக் கேட்டுக் கொண்டார். அதனைப் பாராட்டி ஆரப் தலைவர் ஒரு செய்தி விடுத்தார். அதில் பண்டிதர் பாலஸ்தீனம் போகவேண்டு மென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது. பண்டிதர் தம் முடியாமையைத் தெரிவித்து பதில் தந்தி யனுப்பினர்.

---



---

## மாதர் மறுமண சங்க ஆண்டுவிழா

### டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் தலைமை

காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தின் மூன்றாவது ஆண்டு நிறைவுவிழா ஆவணி 31-ந் தேதி (15-9-37) புதன்கிழமை அவராவதி புதூரில் நடைபெறும். சென்னை டாக்டர் ஸ்ரீமதி முத்துலட்சுமி ரெட்டி தலைமை வகிக்க இசைந்துள்ளார்கள். விழா விமரிசையாக நடைபெற ஏற்பாடாகிறது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

## நாதஸ்வரக் கச்சேரி

திருவாவடுதுறை தென் இந்திய சங்கீத வித்வான் நாதஸ்வரம் ஸ்ரீமான் T. N. இராஜரெத்னம் பிள்ளை அவர்கள் தமது இனிமையான பக்கவாத்தியங்களுடன், 1937 வருஷம் செப்டம்பர்—மாதம் 11-ந் தேதி, இரவு 8 மணி முதல் இரவு 1 மணி வரையில், திருநெல்வேலியில் நாதஸ்வரக் கச்சேரி நடத்துவார்கள். செப்டம்பர் 12-ந் தேதி இரவு 9 மணி கச்சேரி நடத்துவார்கள். செப்டம்பர் 12-ந் தேதி இரவு 9 மணி முதல் 2 இரண்டு மணிவரையில் கும்பகோணத்தைச் சார்ந்த நாச்சியார் கோவிலில் நாதஸ்வரக் கச்சேரி நடத்துவார்கள். என ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

## மனைவிக்குப் பயப்படும் மந்திரி

ஜப்பான் பிரதம மந்திரி ராஜகுமாரர் கோனோயீ தெரியுமல்லவா! அவருக்கு வயது 45. நாகரிகக் கனவான். இவருடைய குமாரர் அமெரிக்க சர்வகலா சங்கத்தில் படிக்கிறார். இவ்வளவிருந்தும் இவர் மனைவிக்குப் பயந்தவர். வீட்டில் இவருடைய மனைவி இட்டதுதான் சட்டம். அதை மீறி இவர் நடந்து கொள்ள முடியாது. சாப்பாட்டுக்கிடையில் தேநீர் சாப்பிடுவதை இவர் மனைவி அனுமதிப்பதில்லை. அந்த ஸ்திரீயின் கடுமையான ஆட்சியில் இவர் ஓர் அடிமை போலிருக்கிறார்.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

